உ

திருச்சிற்றம்பலம்

# நித்திய வழிபாட்டு முறை

(அனுஷ்டானம்)

---

அதிகாலையில் படுக்கையை விட்டு எழும்போது "சிவ சிவ" என்று இறைவன் திருநாமத்தைச் சொல்லி மடியிலுள்ள திருநீற்றுப் பையிலிருந்து சிறிது திருநீற்றை எடுத்து நெற்றியில் தரித்துக்கொண்டு எழுந்திருக்கவும்.

## 1, குளிக்கும்போது

நாம் ஆடும் நீரை இறைவன் வடிவாக எண்ணி கீழ்வரும் பதிகத்தைச் சொல்லிக்கொண்டு குளிக்க.

திருச்சிற்றம்பலம்

களித்துக் கலந்ததோர் காதற்கசிவொடும் காவிரிவாய்க்
குளித்துத் தொழுது முன்நின்ற இப்பத்தரைக் கோதில்
செந்தேன்
தெளித்துச் சுவையமுது ஊட்டி அமரர்கள் சூழிருப்ப
அளித்துப் பெரும் செல்வம் ஆக்கும் ஐயாறன் அடித்தலமே.
(அப்பர்)

திருச்சிற்றம்பலம்

குளித்த பின் தோய்த்து உலர்ந்த ஆடையையும் கோவண ஆடையையும் அணிந்துகொண்டு துலக்கிய சிறு பாத்திரத்தில் தூயநீரை எடுத்துக்கொண்டு தனியிடத்தில் அமர்ந்து வழிபாட்டைத் தொடங்குக. (வழிபாட்டு அறை தனியாக இருப்பின் சாலச் சிறந்தது)

## 2 பிள்ளையார் வணக்கம்

தலையிற் குட்டிக்கொண்டு வழிபாடு முற்றுப்பெற பிள்ளையாரைக் கீழ்வரும் பாடல்களைச் சொல்லித் துதித்தல்.

(அ) ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன் தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே.

(திருமந்திரம்)

(ஆ) வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு. (ஔவையார்)

(இ) திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரும் யானை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை.

திருச்சிற்றம்பலம்

## 5

## சற்குரு வணக்கம்

சைவ சமய குருமார்கள் நால்வருக்கும், தனக்குத் தீக்கை அருளிய குருவிற்கும் வணக்கம் சொல்லுதல்.

(அ) பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடி போற்றி
வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள் போற்றி

(ஆ) தந்தையாய் ஆவானும் சார்கதி இங்காவானும்
அந்தமிலா இன்பம் நமக்காவானும்—எந்தமுயிர்
தாம்ஆ குவானும் சரண் ஆகுவானும் அருட்
கோனாகு வானும் குரு.

## ௬ வழிபடும் இடத்தைச் சுத்தி செய்தல்

(ஸ்தான சுத்தி)

[சிறிது தண்ணீரைக் கையில் எடுத்து]

" பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி "

என்று ஓதி வழிபாடு செய்யும் இடத்தில் தெளித்து, அதைத் தூய்மை செய்யவும்.

வழிபாட்டுக்குரிய தண்ணீரை தூய்மை செய்தல்

## 4 தண்ணீரைச் சிவமாக எண்ணி

[ திரவிய சுத்தி ]

" நீரிடை நான்காய் நிகழ்ந்தாய்ப் போற்றி "

என்று மலர் தூவித் தண்ணீரில் சிவலிங்கத் திருமேனியாய் இறைவன் எழுந்தருளியிருக்கும் திருவானைக்கா பெருமானை எண்ணி.

வானைக்காவில் வெண்மதி மல்குபுல்கு வார்சடைத்
தேனைக்காவில் இன்மொழித் தேவிபாக மாயினான்
ஆனைக்காவில் அண்ணலை அபயமாக வாழ்பவா
ஏனைக்காவல வேண்டுவார்க்கு ஏதும் ஏதம் இல்லையே
(சம்பந்தர் தேவாரம்)

என்னும் பதிகம் ஓதித் துதித்து

வலதுகைப் பெருவிரலை மடித்துக்கொண்டு, மற்ற விரல்களை நீட்டிக் கவிழ்த்து தண்ணீர் உள்ள குவளையை மூடி திருவைந்தெழுத்தை எண்ணித் துதிக்கவும்.

## 5 ஆத்மசுத்தி (ஆசமனம்)

(நீரை உட்கொள்ளுதல்)

நடு மூன்று விரல்களாலும் மேற்கண்ட தண்ணீரை மூன்று முறை தலையின்மேல் தெளித்துக்கொண்டு சிறிது நீரை

உள்ளங்கையில் எடுத்து இறைவனை எண்ணிக்கொண்டு சிவ தீர்த்தமாக மனத்துட்கொண்டு மூன்று முறை உட்கொண்டு கீழ்வரும் பாடலைச் சொல்லித் துதிக்கவும்.

ஒன்று வுலகனைத்து மானார் தாமே
யூழிதோ றாழி யுயர்ந்தார் தாமே
நின்றாகி யெங்கு நிமிர்ந்தார் தாமே
நீர்வளிதீ யாகாச மானார் தாமே

கொன்றாடுங் கூற்றை யுதைத்தார் தாமே
கோலப்ப ழனை யுடையார் தாமே
சென்றாடு தீர்த்தங்களானார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே

(அப்பர்)

## 6 (அ) திருநீற்றைத் தூய்மை செய்தல்

இடது உள்ளங்கையில் திருநீற்றை வைத்து வலக் கையால் முடி வலது தொடைமேல் வைத்துக்கொண்டு

இராவணன் மேலது நீறு எண்ணத்தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவமாவது நீறு
அராவணங் குந்திருமேனி யாலவாயான் திருநீறே

(சம்பந்தர்)

என்ற பாடலைச் சொல்லித் துதித்து, திருநீற்றைப் பராசக்தியின் வடிவமாக எண்ணிச் சிந்தித்துத் திருநீற்றைச் சிறிது எடுத்துத் தலை நெற்றி உடல் முதலியவற்றில் பூசிக் கொண்டு திருநீற்றில் முழுக்காடினதாக எண்ணிக்கொண்டு தண்ணீர்விட்டுக் குழைத்துத் திருநீற்றை அணிந்துகொள்ளும் முன் குழைத்த நீற்றை மோதிர விரலால் சிறிது எடுத்து தீய சக்திகளை விலக்க நிருதி மூலையில் தெளித்த பிறகு தலை, நெற்றி, மார்பு, புயங்கள், இரண்டு முழங்கை, இரண்டு மணிக்கட்டு, கொப்புழ், முழங்கால் இரண்டு, வலது, இடது விலாப்புறங்கள் இரண்டு, நடுமுதுகு, கழுத்து ஆகிய பதினறு இடங்களில் இட்டுக்கொள்ளவும். நெற்றி, மார்பு, தோள்களில் ஆறு அங்குலமும், மற்ற இடங்களில் ஒரு அங்குலமும் கழுத்து முழுவதும் கீழ்வரும் பாடல்களைச் சொல்லித் துதித்துக்கொண்டே அணிந்து கொள்ளவும்.

(தேகசுத்தி)

(அ) கருவாய்க் கிடந்துன் கழலே நினையும்
கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்ற னுமம் பயின்றே
னுனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாயநம வென்று
நீறணிந்தேன்
தருவாய் சிவகதிநீ பாதிரிப்புலியூர் அரனே.

(ஆ) சந்திரர் சடையில் வைத்த சங்கரன் சாமவேதி
அந்தரத் தமரர் பெம்மான் ஆன்நல் வெள்ளூர்தி
யான்றன்

மந்திர நமச்சிவாயவாக நீறணியப் பெற்றால்
வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல்
விறகிட்டன்றே. (அப்பர்)

(இ) கங்காளன் பூசுங் கவசத்திரு நீற்றை
மங்காமற் பூசி மகிழ்வரே யாமாகில்
தங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்காரமான திருவடி சேர்வரே. (திருமந்திரம்)

திருநீறு அணிந்த பிறகு கைகளை அலம்பி, அலம்பிய நீர் இடது கை மூலம் வரும்படி செய்து இடது கையை முஷ்டியாகப் பிடித்துக்கொண்டு பெருவிரலை மட்டும் நீட்டி அதன் வழியாக கையில் உள்ள நீர் வடிந்து கீழ் உள்ள பாத்திரத்தில் விழும்படியாக வலக்கை முஷ்டியைத் தாழ்த்தி மல்லாத்திப் பிடித்துக்கொண்டு பெருவிரல் வழியாக வடியும் நீரைச் சிவ தீர்த்தமாகப் பாவித்து இடது கையின் விரல்களினால் ஏற்று "சென்றாடு தீர்த்தங்களானார் தாமே" என்று சொல்லி இறைவனைத் துதித்துக்கொண்டே மேலே மும்முறை தெளித்துக்கொண்டு வாயிலும் சிறிது விட்டு அருந்துதல் வேண்டும். (ஆத்மசுத்தி)

## (ஆ) திருநீறு அணிதல்

சுத்தி செய்த திருநீற்றை சிறிது எடுத்துக் கொப்புழிலிருந்து கழுத்து வரையிலும், இரு கைகளிலும் மணிக்கட்டுகளிலிருந்து தோள் வரையிலும் சிறிய நேர்கோடாக இழுக்க இதன்மீது மேல் கூறியபடி திருநீற்றைக் குழைத்து 16 இடங்களில் இடுக.

திருநீறு இடவேண்டிய இடம் 16. இப்பதினாறும் இறைவனின் புறத்திருத்தொண்டாம் பதினாறினையும் முறை தவறாது நிறை அன்புடன் இயற்றுதற்கே இவ்வுடல் என்றும் குறிப்பதாகும்.

அவை வருமாறு

1. ஒழுக்கம், 2. அன்பு, 3. அருள், 4. ஆச்சாரம், 5. உபச்சாரம், 6. உறவு, 7. சீலம், 8. தவம், 9. தானம், 10. வந்தித்தல், 11. வணங்கல், 12. வாய்மை, 13. துறவு, 14. அடக்கம், 15. அறிவு, 16. அருச்சித்தல்.

ஆசாரம்—நன்னடை   உபசாரம்—பணிவிடை
வந்தித்தல்—வழிபாடு   துறவு—கற்புநிறை
அருச்சித்தல்—மலர் தூவி வழிபடல்.

ஒழுக்கம், அன்பு, அருள், ஆச்சாரம், உபச்சாரம், உறவு, சீலம், வழுக்கிலா தவம், வந்தனங்கள், வந்தித்தல்,

வணங்கல், வாய்மை, அழுக்கிலாத் துறவு, அடக்கம், அறிவோடு அருச்சித்தல், ஆதி இழுக்கிலா அறங்கள் ஆனால் இறங்குவான் பணி அறங்கள். (சித்தியார்)

திருச்சிற்றம்பலம்

## 7 உறுப்புகளைத் தொடுதல்

வாழ்த்த வாயும் நினைக்கமட நெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்தான் தாள்போற்றி.

என ஓதிக் கைகளைக் கூப்பித் தலை வணங்குக. இஃது அந்நாளால் பெற்ற இவ்வுடலால் இறைவனின் அகத்திருத் தொண்டு இயற்றும் முறைமைக் குறிப்பாகும்.

## உறுப்புக்களைத் தொடும் முறை

வலக்கைப் பெருவிரல் நுனியை அணி விரல் (மோதிர விரல்) நடுவரையிற் சேர்த்து மற்றைய விரல்களை நீக்கி நமது உடலில் ஒன்பது உறுப்புகளையும் அவ்விரல் கொண்டு தொடுக.

இவற்றுள் எட்டாவது எண்ணாகிய ஆக்கையைத் தொடுங்கால் இரு கைவிரல்களையும் தனித்தனி இணைத்துச் சிறிது குவித்துத் தலை முதல் கால் வரை சுட்டி, நெஞ்சின்

நேர் வைத்துக் கும்பிடுக. 10, 11, 12 திருக் கண்ணிகளை அன்புடன் ஓதிக் கைகள் இரண்டையும் உச்சிமேற் குவித்துத் தொழுக. இம்மூன்றும் இறை உயிர் தளை என்னும் முப் பொருள் உண்மையைக் குறிக்கும்,

1. உச்சி : தலைவனைத் தலையே நீ வணங்காய்

2. கண்கள் : கடல் நஞ்சுண்ட கண்டன் தன்னைக்
கண்காள் காண் மின் களோ

3. செவிகள் : எரிபோல் மேனிப் பிரான் திறம்
எப்போதும் செவிகாள் கேண் மின்களோ

4. மூக்கு : வாக்கே நோக்கிய மங்கை மணாளனை
மூக்கே நீ முரலாய்

5. வாய் : பேய்வாழ் காட்டகத்து ஆடும்பிரான் தன்னை
வாயே வாழ்த்துக் கண்டாய்

6. நெஞ்சு : மஞ்சாடும் மலை மங்கை மணாளனை
நெஞ்சே நீ நினையாய்

7. கைகள் : பைவாய் பாம்பரை ஆர்த்த பரமனைக்
கை காள் கூப்பித் தொழீர்

8. ஆக்கை : அரனைப் போற்றி எண்ணாத இவ்
ஆக்கையாற் பயன் என்

9. கால்கள் : கோகரணம் சூழாக் கால்களாற் பயனென்

10. இறை: உற்றார் யார் உளரோ
உயிர் கொண்டு போம்பொழுது
குற்றாலத்துறை கூத்தன் அல்லால் நமக்கு
உற்றார் யாருளரோ.

11. உயிர்: இறுமாந்து இருப்பன் கொலோ—ஈசன்
பல் கணத்து எண்ணப் பட்டுச்
சிறுமான் ஏந்திதன் சேவடிக்கீழ்ச்சென்று அங்கு
இறுமாந்து இருப்பன் கொலோ;

12. தளை: தேவனை என்னுளே தேடிக்
கண்டு கொண்டேன்.

திருச்சிற்றம்பலம்.

## 8 மந்திர சுத்தி

பேராயிரம் பரவி வானோர் ஏத்தும்
பெம்மானைப் பிரிவிலா அடியார்க் கென்றும்

வாராத செல்வம் வருவிப் பானை
மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித்

தீராநோய் தீர்த்தருள வல்லான் றன்னைத்
திரிபுரங்கள் தீயெழத் திண்சிலை கைக்கொண்டு

போரானைப் புள்ளிருக்கு வேளூரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே.

(அப்பர்)

## 9 பிராணாயாமம்

வலது சுட்டு விரல் நடுவிரல் இரண்டையும் உள்ளே மடக்கிப் பெருவிரலால் வலது மூக்கை மூடி ஓம் சிவாய நம என்று ஐந்து முறை சொல்லி இடது மூக்கால் காற்றை உள்ளே இழுத்துக் காற்றை நிறுத்தி மோதிர விரலால் இடது மூக்கை மூடி வலது மூக்கால் காற்றை வெளிவிடவும். மீண்டும் இது போலவே இடது மூக்கை மூடிக்கொண்டு ஐந்தெழுத்தை எண்ணிக்கொண்டே வலது மூக்கால் காற்றை உள்ளிழுத்து இடது மூக்கால் வெளிவிடுக. இதுபோன்று இயன்றளவு செய்க.

இதுசமயம் கொப்புழுக்கு நான்கு விரல் இடம் கீழ் உள்ள இடமாகிய மூலாதாரம் என்னும் இடத்திலிருந்து குண்டலினி என்னும் சிவசக்தி எழுந்து மேல்நோக்கி மூலாதாரம், கொப்புழ் மார்பு, கழுத்து, புருவமத்தி, உச்சி தலைக்குமேல் பன்னிரண்டங்குலமளவில் உள்ள இடம் ஆகிய உணர்ச்சி நிலையங்களில் எழுந்தருளி விளங்குவதாக எண்ணிப் பிறகு தலைக்குமேல் இரு கைகளையும் கூப்பி வணங்கி மேற்கண்ட சிவசக்தியை அங்கிருந்து கூப்பிய கரத்தினூடேயாக மார்புக்கு கொணர்ந்து மார்பில் எழுந்தருளி விளங்குவதாகக் கொண்டு பஞ்சபுராணம் ஓதித் துதிக்க.

# 10 பஞ்சபுராணம் என்னும் துதிப்பாடல்கள்

தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் ஆகிய ஐந்து நூல்களையும் பஞ்சபுராணம் என்று சொல்வது மரபு. வழிபாட்டின் போது குறைந்த அளவு மேற்கண்ட நூல்களில் ஒவ்வொன்றாக ஐந்து பாடல்களாவது பாடித்துதித்தல் வேண்டும். கூடுமானால் பத்தாம் திருமுறையாகிய திருமந்திரத்தில் ஒரு பாட்டும், பதினொன்றாம் திருமுறையில் ஒரு பாட்டும், ஆக பன்னிரு திருமுறைகளிலும் ஒவ்வொரு பாட்டாவது சொல்லித் தினந்தோறும் வழிபடுவது சைவருடைய கடமையாகும். மேற்குறிப்பிட்ட பன்னிரு திருமுறைகளும் தவறாமல் ஒவ்வொரு சைவர் இல்லத்திலும் இருக்க வேண்டுவன

அ. பிடியதன் உரு உமை கொள மிகு கரியது
வடி கொடு தன தடி வழி படும் அவர் இடர்
கடிகண பதிவர அருளினன் மிகு கொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே.

[சம்பந்தர்]

ஆ. தோடுடைய செவி யன்விடை ஏறியோர் தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப்பொடி பூசியென் உள்ளங் கவர் கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந்தேத்த அருள் செய்த
பீடுடைய பிரமாபுரமேவிய பெம்மானிவனன்றே.

அருநெறிய மறைவல்ல முனியகன்பொய் கையலர் மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மான் இவன் தன்னை
ஒருநெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன் உரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல் வினைதீர்தல் எளிதாமே. (சம்பந்தர்)

## திருவாசகம்

௩. அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெருமானே
இம்மையே உன்னைச்சிக் கெனப்பிடித்தேன்
எங்கு எழுந்தருளுவது இனியே

## திருவிசைப்பா

௪. கண்பனி அரும்பக்கைகள் மொட்டித்தென்
கனகனே ஓலம் என்று ஓலிட்டு
என்பெலாம் உருக்கும் அன்பர் தம் கூட்டத்துள்
என்னையும் புணர்ப்பவன் கோயில்

பண்பல தெளிதேன் பாடிநின்று ஆடப்
பனிமலர்ச் சோலைசூழ் மொழுப்பில்
செண்பகம் அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம் பலமே

## திருப்பல்லாண்டு

உ. மன்னுக தில்லை வளர்க நம்பக்தர்கள் வஞ்சகர் போயகலப்
பொன்னின் செய் மண்டபத்துள்ளே புகுந்து புவனியெல்லாம் விளங்க
அன்ன நடை மடவாள் உமை கோன் அடியோமுக்கு அருள் புரிந்து
பின்னைப்பிறவி அறுக்கநெறி தந்த பித்தற்குப் பல்லாண்டு கூறுதுமே

## பெரிய புராணம்

௳. நன்மை பெருகு அருள்நெறியே வந்தணைந்து நல்லூரில்
மன்னுதிருத் தொண்டனர் வணங்கி மகிழ்ந்து எழும்பொழுதில்
உன்னுடை நினைப்பதனை முடிக்கின்றோம் என்று அவர்தம்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான்

## வாழ்த்துப்பா

எ. வாழ்க அந்தணர் வானவர் ஆன்இனம்
வீழ்க தன்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

## 11 ஜபம்

மனதைப் புருவ மத்தியில் நிறுத்தி பத்மாசனத்தில் அமர்ந்த வண்ணம் "ஓம் சிவாய நம" என்று 108 தரம் மனத்திற்குள்ளாகவே எண்ணுக.

## 12 தியானம்

இறைவன் புருவ மத்தியில் ஒளிவடிவாக விளங்குவதாக எண்ணி எந்தவிதமான வேற்று எண்ணமும் இன்றி அமைதியாகச் சிவனைச் சிந்தித்து இருக்கவும். மேற்கண்டவாறு (அனுஷ்டானத்தை) வழிபாட்டை முடித்துக்கொண்டு புறத்தில் சிவ வழிபாடு தொடங்குதல் வேண்டும்.

இத்துடன் நித்திய வழிபாடு முற்றுப்பெறும். சிவபூசை செய்வோர் இதற்குமேல் இரண்டாம் பகுதியைப் பார்க்க.

திருச்சிற்றம்பலம்

உ

# ஆன்மார்த்த மூர்த்தி வழிபாடு

(சிவபூசை)

முதலிற் குறிப்பிட்ட வண்ணம் வழிபாட்டை முடித்துக் கொண்டு சிவபூஜை தொடங்குக.

1. வழிபாட்டிற்கு இறைவன் திருவருள் துணைநின்று வழிபாட்டை முற்றுவிக்க வேண்டுமென்றெண்ணுதல் !

திருச்சிற்றம்பலம்

"வாயானை மனத்தானை மனத்துணின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான்றன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் றன்னைச்
சுடர்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்

தாயானைத் தவமாய தன்மையானைத்
தலையாய தேவாதி தேவர்க்கென்றும்
சேயானைத் தென்கூடற் றிருவாலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே"
[அப்பர்]

என்ற பாடலைச் சொல்லித் துதிக்கவும்

திருச்சிற்றம்பலம்

## 2. உள்ளத்தில் இடங்கொண்டிருக்கும் இறைவனை எண்ணுதல்

" தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா யார்கொலோ சதுரர்
அந்த மொன்றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சித்தையே கோயில் கொண்ட எம்பெருமான்
திருப் பெருந்துறை யுறை சிவனே
எத்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யான் இதற்கிலன் ஓர் கைம்மாறே "

(திருவாசகம்)

என்ற பாடலைச் சொல்லித் துதிக்கவும். பிறகு இறைவனை உள்ளத்தில் எழுந்தருளி விளங்கும்படி எண்ணி

## ௩ (அ) உட்பூசை

ஒரு மலரைத்தலையின் மீது போட்டுக்கொண்டு இறைவன் நமது உள்ளத்தாமரையின்கண் துயில்வதாகப் பாவித்து அவரைத் திருப்பள்ளி எழுச்சி பாடி விழித்தெழச் செய்து திருமுழுக்காட்டி அழகு செய்வித்து அர்ச்சித்து வழிபாடு மானசீகமாக அகத்தின் கண் செய்க.

### நமது உடலே கோயிலாகப் பாவித்தல்

" காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மன மணியிலிங்கமாக

நேயமே நெய்யும் பாலா நிறைய நீரமைய வாட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்ற விக்காட்டினோமே ''
[அப்பர்]

திருப்பள்ளியெழுச்சி

'' போற்றி யென்வாழ் முதலாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற்கு இணைதுணை மலர்கொண்டு
ஏற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
சேற்றிதழ்க் கமலங்கள் மலரும்தண் வயல்சூழ்
திருப்பெருந்துறை உறை சிவபெருமானே
ஏற்றுயர்க்கொடி யுடையாய் எனை உடையாய்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே ''
(திருவாசகம்)

## (ஆ) பூதசுத்தி செய்ய

'' மண்ணதனில் ஐந்தை மாநீரின் நான்கை
வயங்கு எரியின் மூன்றை மாருதத்தின் இரண்டை
விண்ணதனில் ஒன்றை விரிகதிரைத்
தண்மதியைத் தாரகைகள் தம்மின் மிக்க
எண்ணதனில் எழுத்தை யேழிசையைக் காமன்
எழில்அழிய வெரியுமிழ்ந்த இமையா நெற்றிக்
கண்ணவனைக் கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே ''
[அப்பர்]

என்ற பாடலைப்பாடி எல்லாம் சிவமாக எண்ணித் தியானித்த பின்,

## 4. (ஸ்தான சுத்தி) இடத்தைச் சுத்தம் செய்தல்

சிறிது நீரை எடுத்துப் "பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி" என்று கூறி வழிபாடு செய்யும் இடத்தில் தெளித்துச் சுத்தம் செய்துகொள்ளவும்.

## திரவியசுத்தி

திருமுழுக்காட்டும் நீர் நிறைந்த பாத்திரத்தை வலது கைப் பெருவிரலை மடித்து மற்றைய நான்கு விரல்களையும் நீட்டி கையை கவிழ்த்து மூடி அந்நீரைச் சிவமாகப் பாவித்துக் கீழ்வரும் பாடலைச் சொல்லித் துதிக்க

"ஆவாகி ஆவினில் ஐந்துமாகி
அறிவாகி அழலாகி அவியுமாகி
நாவாகி நாவுக்கோர் உரையுமாகி
நாதனாய் வேதத்தின் உள்ளோனாகிப்
பூவாகிப் பூவுக்கோர் நாற்றமாகிப்
புக்குளால் வாசமாய் நின்றானாகித்
தேவாகித் தேவர் முதலுமாகிச்
செழுஞ்சுடராய்ச் சென்றடிகள் நின்றவாறே"
ஏவிஇடர் கடலினைபற்றி இளைக்கின்றேன்

(அப்பர்) 6-ம் திருமுறை

ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளேக்கின் றேனை இப்பிறவி
யறுத்தேற வாங்கி யாங்கே
கூவிஅம ருலகனைத்து முருவிப்போகக் குறியில்
அறுகுணத் தாண்டு கொண்டார்போலும்
தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை சரசுவதி
பொற்றாமரை புட்கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த குடந்தைக்
கீழ்க் கோட்டத்தெங் கூத்தனாரே.

என்ற பாடலைச் சொல்லித் துதித்து மலர்களால் அந்நீரை அர்ச்சித்து அதன்பிறகு அர்க்கிய பாத்திரங்களில் அந்நீரை நிரப்புக.

## 5 மந்திர சுத்தி

'' பேராயிரம் பரவி வானோ ரேத்தும்
பெம்மானைப் பிரிவிலா அடியார்க்கு என்றும்
வாராத செல்வம் வருவிப் பானை
மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்
திரிபுரங்கள் தீயெழுத்திண் சிலைக் கைக்கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே '' (அப்பர்)

## பரிதி வழிபாடு

### (சிவசூரிய பூசை)

சிவம் எங்கும் கலந்து நிறைந்து நின்றாலும் அட்டமூர்த்தமாக எட்டு இடங்களில் விளங்கித் தோன்றுகின்றது. அவை யாவன; மண், நீர், தீ, காற்று, வான், உயிர்கள், சூரியன், சந்திரன். ஆகவே சிவபூசை செய்யும் போது சூரிய மண்டலத்தில் விளங்கித் தோன்றும் சதாசிவ மூர்த்தியை வழிபடவும்.

ஒரு மலரை எடுத்து வழிபாட்டு மூர்த்திக்குக் கிழக்கில்
'' அருக்கனில் சோதி அமைத்தோன் காண்க ''

என்று சொல்லி சிவசூரியனைப் பாவித்து, "பரிதிப் பெருமான் பதமலர் வாழ்க" என்று மலரால் அர்ச்சித்து தூபம் தீபம் காட்டி வழிபட்டு, கீழ்வரும் பாடலைச் சொல்லி கைகூப்பி வணங்குக.

"அனைத்து வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனோ"

[அப்பர்]

## 6 துவார பூசை செய்ய

வழிபாடு செய்யும் இடத்தில் ஐந்து திருமதில்களோடு ஒரு சிவாலயம் இருப்பதாகப் பாவித்து முதலில் வாயிற் காவலரை வாழ்த்தி வழிபடுதல்.

### திருப்புன்கூர்

"நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன்
நாவினுக் கரையன் நாளைப் போவானும்
கற்ற சூதன் நற்சாக்கியன் சிலந்தி
கண்ணப்பன் கணம் புல்லன் என்று இவர்கள்
குற்றம் செய்யினுங் குணமெனக் கருதும்
கொள்கைகண்டு நின்குரை கழல் அடைந்தேன்
பொற்றிரள் மணிக்கமலங்கள் மலரும்
பொய்கை சூழ் திருப்புன் கூருளானே"

"மூவெயில் செற்றஞான்று உயர்ந்த மூவரில்
இருவர் நின் திருக்கோயிலின் வாய்தல்
காவலாளர் என்று ஏவிய பின்னை
யொருவன் நீ கரி காடரங்காக
மானை நோக்கியோர் மாநட மகிழ
மணிமுழா முழக்க அருள் செய்த
தேவதேவ நின் திருவடி அடைந்தேன்
செழும் பொழில் திருப்புன் கூருளானே"

(சுந்தரர்)

இரண்டு மலர்களை வாயில் காவலராக வழிபாட்டு இடத்தில் சிவலிங்கத்திற்கு முன்வைத்து மேற்சொன்ன பாடலைச் சொல்லி வழிபடுக.

## 7 பூசை பெட்டகத்தைத் திறக்க

"பண்ணின் நேர்மொழியாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்ம்மறைக் காடரோ
கண்ணி னால் உமைக் காண கதவினைத்
திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே"

என்ற பாடலைச் சொல்லித் துதித்துப் பெட்டியைத் திறந்து பெட்டகக் கோயிலினின் றுடையவரை எழுந்தருளப்பண்ணிக் கீழ்வரும் பாடலைச் சொல்லித் துதிக்க.

ஆண்டானை அடியேனை ஆளாக் கொண்டு
அடியொடு முடிஅயன் மால் அறியாவண்ணம்
நீண்டானை நெடுங்களமா நகரான் தன்னை
நேமிவான் படையான் நீள உரவோ னாகம்
கீண்டானைக் கேதார மேவி னானைக்
கேடிலியைங் கிளர்பொறி வாளர வோடென்பு
பூண்டானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே (அப்பர்)

## 8. திருமுழுக்காட்டும் பல்லைகயில் உடையவரை எழுந்தருளச் செய்தபின் சொல்ல.

திருச்சிற்றம்பலம்

பந்த பாச மறுத் தெனை யாட் கொண்ட
மைந்தனை மணவாளனை மாமலர்க்
கந்த நீர்க் கடுவாய்க் கரைத் தென்புத்தூர்
எந்தை ஈசனைக் கண்டினி தாயிற்றே (அப்பர்)

## 9. இலிங்க சுத்தி

இறைவனை சிவலிங்கத் திருமேனியில் எழுந்தருளச் செய்யும் முன்னர் சுத்தி செய்ய

வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என் சொல்லி வாழ்த்துவனே
(திருவாசகம்)

தூய்மை செய்து வைத்துள்ள நீரை சிறிது மலரால் எடுத்துத் திருவுருவின் மீது ஐந்து எழுத்தை ஓதித் தெளித்து மூர்த்தியை சுத்தம் செய்துகொண்ட பிறகு இருகைகளாலும் மலர்களை எடுத்து உள்ளடக்கிக் கூப்பிய கரத்தைத் தலைக்குமேல் உயர்த்திக் கைகளை சேர்த்தியபடியே விரல்களை மட்டும் பூக்குடலை போல் விரித்துப் பரவெளியில் விளங்கும் இறைவனைக் கையில் உள்ள மலர்களின் மூலம் இறங்கி வருவதாக பாவனை செய்து புருவமத்திக்குக் கொண்டு வந்து இறைவனை எண்ணிப் பிறகு மார்புக்கு நேராக வைத்துத் தனது உள்ளத்திலுள்ள இறைவன் தன் முன்னால் உள்ள சிவலிங்கத் திருமேனியில் எழுந்தருள வேண்டிக் கையில் உள்ள மலரைச் சொரிந்து இறைவனை எழுந்தருள வேண்டுக.

## 10. நிறுவுதல், (ஆவாஹனம்)

மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத்(து) அமுதே
ஊறிநின் றென்னுள் எழுபரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெருமானே
திருப்பெருந்துறை யுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
இன்பமே என்னுடை அன்பே.

[திருவாசகம்]

என்ற பாடலைச் சொல்லி திருஉருவத்தில் இறைவன் எழுந்தருளியதாகப் பாவித்துத் திருவுருவத்தின் மீது மலர் தூவவும்.

## 11. திருவுருவை இறைவனாகக் காணுதல்

அதுபழச் சுவையென அமுதென அறிதற்
கரிதென எளிதென அமரரும் அறியார்
இதுஅவன் திருவுரு இவனவன் எனவே
எங்களை ஆண்டு கொண்டிங்கெழுந் தருளும்
மதுவளர் பொழில் திருவுத்தர கோச
மங்கையுள்ளாய் திருப்பெருந்துறை மன்னா
எதுஎமைப் பணிகொளு மாறது கேட்போம்
ஏம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே.

(திருவாசகம்)

## 12. அஷ்ட புஷ்பஞ் சாத்த

(அ) " அட்ட மாமலர் சூடி யடும்பொடு
வட்டப் புன் சடைமா மறைக் காடரோ
நட்டமாடியு நான்மறை பாடியும்
இட்ட மாக இருக்கும் இடமிதே "

### மலர் தூவி வணங்குக

(ஆ) " எல்லாஞ் சிவனென்ன நின்றாய் போற்றி
எரிசுடராய் நின்ற இறைவா போற்றி
கொல்லார் மழுவாட் படையாய் போற்றி
கொல்லுங்கூற் றொன்றை உதைத்தாய் போற்றி
கல்லாதார் காட்சிக் கரியாய் போற்றி
கற்றார் இடும்பை களைவாய் போற்றி
வில்லால் வியன்அரணம் எய்தாய் போற்றி
வீரட்டங் காதல் விமலா போற்றி "

என்ற பாடலால் மலர் தூவி அர்ச்சிக்க.

## 15. அர்க்கியம் (நீர் கொடுத்தல்)

" தோ டொரு காதனுகி யொருகா திலங்கு
சுரி சங்கு நின்று புரளக்
காடிடமாக நின்று கனலாடு மெந்தை
யிடமாய காதல் நகர்தான்
வீடுடன் எய்துவார்கள் விதி யென்று சென்று
வெறி நீர் தெளிப்ப விரலால்
நாடு உடன் ஆடு செம்மை யொலி வெள்ள மாரு
நனி பளளி போலு நமர் காள் "

மூர்த்திக்கு முன்னர் பாத்தியம் ஆசமனம் அர்க்கியம் ஆகிய மூன்றுக்கும் மூன்று கிண்ணங்களை வைத்து அவற்றில் தூய்மை செய்த நீரை நிரப்புக. பாத்தியம் கால்களைச் சுத்தம் செய்யவும், ஆசமனம் - குடிக்க நீர் கொடுக்கவும் அர்க்கியம் - குளிக்க நீர் கொடுக்கவும் ஆகும். இவை நம் வீட்டுக்கு வரும் விருந்தினர்க்கு முதலில் கால் கழுவ நீர் கொடுத்துப் பின் களைப்புத் தீர நீர் அருந்தக் கொடுத்துப் பின் குளிக்கச் செய்வதை ஒக்கும். பாத்தியம், ஆசமனம் அர்க்கியம் இவற்றை மலரினால் எடுத்து இறைவனுக்கு மேற்சொன்ன முறையில் பாத்தியம் இறைவனது திருவடிகளிலும் ஆசமனம் முகத்திற்கு நேராகவும் அர்க்கியம் இறைவனது திருமுடிக் கண்ணும் கொடுக்க.

## 14. திருமுழுக்காட்டுதல்

சிவபுராணத்தை ஓதிக்கொண்டே திருமுழுக்காட்டி ஆடை அணிவித்துப் பூமாலை அணிவித்து திருநீறு சந்தனம் முதலியன சாத்தி அழகு படுத்தல் வேண்டும். சிறப்பு நாட்களில் கீழ்க் கண்ட பாடல்களைச் சொல்லிக் கொண்டு இதிற்கண்ட பொருள்களினால் முழுக்காட்டவும்,

## எண்ணெய்க் காப்பு

" ஆடினாய்நறு நெய்யொடு பால் தயிர்
அந்தணர் பிரியாத சிற்றம்பலம்
நாடினாயிடமா நறுங் கொன்றை நயந்தவனே
பாடினாய் மறை யோடு பல்கீதமும்
பல்சடைப்பனி கால் கதிர்வெண் திங்கள்
சூடினாய் அருளாய் சுருங்க, எமதொல் வினையே "
(சம்பந்தர்)

## பஞ்ச கவ்வியம

" பர்வமும் பழி பற்றற வேண்டுவீர்
ஆவில் ஐஞ்சு உகந்தாடும் அவன் கழல்
மேவராய் மிகவும் மகிழ்ந்துள்குமின்
காவலாளன் கலந்து அருள் செய்யுமே "
(அப்பர்)

## பஞ்சாமிர்தம்

" பாலினால் நறுநெய்யால் பழத்தினால் பயின்றாட்டி
நாலினால் மணமாலை கொணர்ந்து அடியார்
புரிந்தேத்தச்
சேலினாற் வயல் புடைசூழ் செங்காட்டங்குடி யதனுள்
காலினாற் கூற்று உதைத்தான் கணபதீச்சரத்தானே
(சம்பந்தர்)

## நெய் முழுக்கு ஆட்ட

" நெய்யாடி நின்மலனே நீல கண்டா
நிறைவுடையாய் மறைவல்லாய் நீதி யானே
மையாடு கண்மடவாள் பாகத் தானே
மான் தோலுடையாய் மகிழ்ந்து நின்றாய்
கொய்யாடு கூவிளங் கொன்றை மாலை
கொண்டடியேன் நான் இட்டுக் கூறி நின்று
பொய்யாத சேவடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே "

(அப்பர்)

## பால் முழுக்காட்ட

" பாலையாடுவர் பன்மறை யோதுவர்
சேலையாடிய கண்ணுமை பங்கனார்
வேலையார் விடமுண்ட வெண்காடர்க்கு
மாலையாவது மாண்டவர் அங்கமே "

(அப்பர்)

## தயிர் முழுக்காட்ட

நெய்யும் பாலும் தயிருங் கொண்டு நித்தல் பூசனை
செய்யலுற்றார்
கையிலொன்றுங் காணமில்லை கழலடி தொழுது
உய்யின் அல்லால்

" ஐவர் கொண்டு இங்கு ஆட்ட ஆடி ஆழ்குழிப் பட்டு
அழுந்துவேற்கு
உய்யுமாறு ஒன்று அருளிச் துய்யீர் ஓணகாந்தன்
தளியுளீரே "

(சுந்தரர்)

## தேன் முழுக்காட்ட

" வான நாடனே வழித்துணை மருந்தே
மாசிலா மணியே மறைப் பொருளே
ஏனமா எயிறு ஆமையும் எலும்பும்
ஈடு தாங்கிய மார்புடையானே
தேன் நெய் பால் தயிர் ஆட்டு உகந்தானே
தேவனே திரு ஆவடு துறையுள்
ஆனையே யென்னை அஞ்சல் என்று அருளாய்
ஆரெனக்கு உறவு அமரர்கள் ஏறே "

(சுந்தரர்)

## கருப்பஞ்சாறு முழுக்காட்ட

" ஆலைப்படு கரும்பின் சாறு போல
அண்ணிக்கும் அஞ்செழுத்தின் நாமத் தான்காண்
சீலமுடையடியார் சிந்தை யான்காண்
திரிபுர மூன்று எரிபடுத்த சிலை யினான்காண்

பாலினொடு தயிர் நறுநெய் யாடினான் காண்
பண்டரங்க வேடன்காண் பலிதேர் வான்காண்
வேலை விடமுண்ட மிடற்றி னான்காண்
விண்ணிழி தண்வீழி மிழலையானே ''
(அப்பர்)

## இளநீர் முழுக்காட்ட

'' நெய்யி னொடு பால் இளநீர் ஆடினான் காண்
நித்தன் மணவாளன்என நிற்கின் றான்காண்
கையின் மழுவா ளோடுமான் ஏந்தி னான்காண்
காலன்உயிர் காலாற் கழிவித் தான்காண்
செய்யதிரு மேனிவெண் ணீற்றி னான்காண்
செஞ்சடை மேல்வெண்மதி யஞ்சேர்த்தி னான்காண்
வெய்யகனல் விளையாட்டு ஆடி னான்காண்
விண்ணிழி தண்வீழி மிழலையானே ''
(அப்பர்)

## சந்தனக்குழம்பு ஆட்ட

'' சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்திங்கட்
சூளா மணியும்
வண்ணவுரிவை உடையும் வளரும் பவள நிறமும்
அண்ணல் அரன் முரன் ஏறும் அகலம் வளாய அரவும்

திண்ணன் கெடிலப் புனலும் உடையார் ஒருவர்
தமர்நாம்
அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை''
(அப்பர்)

நல்ல தண்ணீர் ஆட்ட

'' தடங்கொண்ட தோர்தாமரைப் பொன்முடி தன்மேற்
குடங்கொண்டு அடியார் குளிர்நீர் சுமந்தாட்டப்
படங்கொண்ட தோர்பாம் பரையார்த்த பரமன்
இடங்கொண் டிருந்தான் தன் இடை மருதீதே''
(சம்பந்தர்)

உடையவரைப் பீடத்தில் எழுந்தருளப் பண்ண

'' கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானு றுறையுமிடம்
தள்ளாய சம்பாதி சடாயு என்பார் தாமிருவர்
புள்ளானூர்க்கு அரையன்இடம் புள்ளிருக்கு வேளூரே''
(சம்பந்தர்)

கோவண உடை பாவனை சாத்த

'' பாவண மேவுசொன் மாலையிற் பல
நாவணங் கொள்கையின் நவின்ற செய்கையர்
ஆவணங் கொண் டெமையாள் வராயினும்
கோவணங் கொள்கையர் கொள்ளிக் காடரே''

## பரிவட்டம் (ஆடை சாத்த)

" கட்டிட்டதலை கையேந்திக் கனல்எரி ஆடிச்சீரிச்
சுட்டிட்ட நீறுபூசிச் சுடுபிணக் காடராகி
விட்டிட்ட வேட்கையார்க்கு வேறுஇருந் தருள்கள்செய்து
பட்டிட்ட உடையராகிப் பருப்பதம் நோக்கினாரே "

(அப்பர்)

## திருநீறு சாத்த

" மந்திர மாவது நீறு வானவர்மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துவர் வாய்உமை பங்கன் திருவால வாயான் திருநீறே

ஆற்றல்அடல் விடையேறும் ஆலவாயான் திருநீற்றைப்
போற்றிப் புகலிநிலாவும் பூசுரன் ஞானசம்பந்தன்
தேற்றித் தென்னன்உடல் உற்றதீப்பிணி ஆயின தீர
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே "

(சம்பந்தர்)

## சப்தனஞ் சாத்த

" ஆளான அடியவர்கட்கு அன்பன் தன்னை
ஆனஞ்சம் ஆடியைநான் அபயங் புக்க
தாளானைத் தன்ஒப்பார் இல்லா தானைச்
சந்தனமுங் குங்குமமுஞ் சாத்துந் தோய்ந்த

தோளானைத் தோளாத முத்தொப் பானைத்
தூவெளுத்த கோவணத்தை அரையில் ஆர்த்த
கீளானைக் கீழ்வேளூர் ஆளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே ''

## பூணூல் சாத்த

'' முத்தேர் நகையாளிட மாகத்தம் மார்பில்
வெண்ணூல்பூண்டு
தெத்தேர் மலர்சடையில் வைத்தாரிடம்போலுஞ்
சோலைசூழ்ந்த
அத்தேன் அளியுள் களியால் இசைமுரல வாலத்தும்பி
தெத்தேயென முரலக் கேட்டார்வினை கெடுக்குந்
திருநணாவே ''

## மலர் சூட்ட

'' போது தாதொடு கொண்டு புனைந்துடன்
தாதுஅவிழ் சடைச் சங்கரன் பாதத்துள்
வாதை தீர்க்க வென்றேத்திப் பராய்த்துறைச்
சோதியானைத் தொழு தெழுந்து உய்மினே ''
(அப்பர்)

## 15. மலர் வணக்கம் (அர்ச்சனை)

" கற்றவர்கள் உண்ணும் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லும் கதியே போற்றி
அற்றவர்கட்கு ஆரமுதம் ஆனாய் போற்றி
அல்லல் அறுத்து அடியேனை ஆண்டாய் போற்றி
மற்றொருவர் ஒப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்றும் மருந்தே போற்றி
செற்றவர் தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலட்டானனே போற்றி போற்றி. "

" வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆள்என்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி யுள்ளே யொளித்தாய் போற்றி
ஓவாத சத்தத்தொலியே போற்றி
ஆற்றாகி யங்கே யமர்ந்தாய் போற்றி
ஆறங்க நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்கும் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. "

" உண்ணா துறங்கா திருந்தாய் போற்றி
ஓதாதே வேத முணர்ந்தாய் போற்றி
எண்ணா விலங்கைக்கோன் றன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்துகந்த ஈசா போற்றி
பண்ணா ரிசையின் சொற்கேட்டாய் போற்றி
பண்டேயென் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணா யுலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி " (அப்பர்)

"தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி
ஏகம்பத்துறை யெந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளுந்தானும் உடனே காண்க" (திருவாசகம்)

என்று கூறி மலர்தூவி வழிபடவேண்டும். பிறகு இறைவனுக்கு உரிய உணவை முன்னால் வைத்து

## 16. தூபம் காட்டுதல்

"சலம்பூ வொடுதூப மறந் தறியேன்
தமிழோ டிசைபா டல்மறந் தறியேன்
நலந்தீங் கிலுமுன் னைமறந் தறியேன்
உன்னா மமென்னா வில்மறந் தறியேன்
உலந்தார் தலையிற் பலிகொண் டுழல்வாய்
உடலுள் ளுறுசூ லைதவிர்த் தருளாய்
அலந்தே னடியே னதிகைக் கெடில
வீரட்டானத் துறையம் மானே" (அப்பர்)

என்ற பாடலைச் சொல்லித் தூபங் காட்டி மலரில் நீரை எடுத்து இறைவனை உண்ணும்படி ஏழுமுறை உணவைக் கை காட்டி முன்கூறிய "ஆலந்தான் உகந்து அமுது செய்தானை" என்ற பாடலைச் சொல்லிக்கொண்டே உண்பித்தும், பிறகு பாத்யம் இருமுறையும் ஆசமனம் மும்முறையும் அர்க்கியம் ஒரு முறையும் கொடுக்க.

## 17. பின்வரும் பாடலைச் சொல்லித் தீபங் காட்டுதல்

" ஆதியாய் நடுவுமாகி அளவிலா அளவுமாகிச்
சோதியாய் உணர்வுமாகி தோன்றிய பொருளுமாகிப்
பேதியா ஏகமாகிப் பெண்ணுமாய் ஆணுமாகிப்
போதியா நிற்கும் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி "

## 18. கற்பூரங் காட்டல்

" கற்பனை கடந்த சோதிக் கருணையே உருவமாகி
அற்புதக் கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பரவியோம மாகுந் திருச்சிற்றம்பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி "

(பெரிய புராணம்)

என்று சொல்லித் துதிக்கவும்
பிறகு பன்னிரு திருமுறைகளை ஓதித் துதித்தல் வேண்டும்.

## 19. துதிப்பாடல் (தோத்திரம்)

**தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம், பதினொன்றும் திருமுறை, பெரிய புராணம் ஆகிய திருமுறைகளில் ஒவ்வொரு பாடலைச் சொல்லித் துதித்து 'வாழ்க அந்தணர்' முதலிய வாழ்த்துக் கூறுதல் வேண்டும்.**

மீண்டும் கற்பூரம் காட்டிவைத்த பின்னர் இறைவனுக்கு அணிந்த மலரில் ஒன்றை எடுத்துக் கீழ் வரும் பாடலைச் சொல்லிச் சண்டிகேஸ்வர நாயனாரை எண்ணி சிவலிங்கத் திருமேனியின் கோமுகம் உள்ள பக்கம் வைத்து சண்டிகேஸ்வரரை வணங்கி இறைவனுக்கு ஊட்டிய உணவில் சிறிது தனியாக எடுத்து வைத்து சண்டிகேஸ்வரருக்கு ஊட்டி வழிபடவும்.

## 20. சண்டிகேஸ்வரர் துதி

"பொன்னங் கடுக்கை முடிவேய்ந்த புனிதற் கமைக்கும் போனகமும்
மின்னுங் கலனுடைகள் பிறவும், வேறு தனக்கென் றமையாமே
மன்னுந் தலைவன் பூசனையின் மல்கும் பயனை யடியார்கள்
துன்னும்படி பூசனை கொள்ளும் தூயோனடித் தாமரை தொழுவோம்"

## 21. இறைவன் திருவருளைப் பெற்று வினை நீக்கம் பெறுதல்

இறைவன் திருவருளாக எண்ணிச் சிறிது திருநீற்றை எடுத்துக் கீழ்வரும் பாடலைச் சொல்லிக் கொண்டு நெற்றியில் உத்தூளனமாக அணிந்துக்கொண்டு திருவருளைப் பெற்றதாகப் பாவித்துக் கொள்க.

படைக்கலமாகவுன்னுமத் தெழுத்தஞ் செனுவிற் கொண்டேன்
இடைக்கலமல்லே னெழுபிறப்பும் முனக்காட் செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் றொழுது வணங்கித்தூ நீறணிந்துன்
அடைக்கலங் கண்டாயணி தில்லைச் சிற்றம் பலத்தானே.

(அப்பர்)

## 22. ஜெபம், தியானம்.

பிறகு பத்மாசனத்திலமர்ந்து 108 முறை குருவினிடம் உபதேச முறையில் பெற்ற மூல மந்திரத்தை எ ண் ணி வழிபடவும்.

## 23. மந்திரம், செயல், ஆன்மா மூன்றையும் இறைவனுக்கே ஒப்புக் கொடுத்தல்.

முன்னே யுரைத்தால் முகமனே யொக்குஇம் மூவுலகுக்கும்
அன்னையு மத்தனுமாவாய முல்வணு நீயலையோ
உன்னை நினைந்தே கழியுமென்னுவி கழிந்ததற்பின்
என்னை மறக்கப் பெருயெம் பிரானுன்னை வேண்டியதே

(அப்பர்)

"கண்ணார் நுதலோய் கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர

எண்ணா திரவும் பகலும் நான் அவையே எண்ணும் அதுவல்லால்

மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன் கழற்கே புகுமாறும்

அண்ணா எண்ணக் கடவேனே அடிமைசால அழகுடைத்தே"

(திருவாசகம்)

"அன்றே என்றன் ஆவியும் உடலும் உடமை எல்லாமுங்

குன்றே அனையாய் என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ

இன்றோர் இடையூ றெனக்குண்டோ எண் தோள் முக்கண் எம்மானே

நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே"

(திருவாசகம்)

என்ற பாடல்களைச் சொல்லி அர்க்கிய நீரை ஒரு பூவினால் எடுத்து மந்திரம், செயல், ஆன்மா மூன்றையும் இறைவனுக்கு ஒப்புக் கொடுத்ததாகப் பாவித்து விடுக.

## 24. வழிபாட்டிலுள்ள குற்றம் குறைகளை மன்னிக்க இறைவனை வேண்டுதல்.

" பொன்னும் மெய்ப்பொருளுந்தரு வானைப்
போகமுந் திருவும் புணர்ப்பானை
பின்னை என்பிழையைப் பொறுப் பானைப்
பிழையெலாந் தவிரப்பணிப் பானை
இன்ன தன்மைய னென்றறி வொண்ணா
எம்மானை யெளிவந்த பிரானை
அன்னம் வைகும் வயற்பழனந்தணி,
ஆரூரானை மறக்கலுமாமே " (சுந்தரர்)

என்று சொல்லி வணங்கி விடை பெறுதல்.

தலை, மூக்கு, காதுகளிரண்டு புயங்களிரண்டு, முழங்கால்களிரண்டு, ஆகிய எட்டுறுப்புகளும் நிலம் தோய மும்முறை எழுந்து நின்று விழுந்து வணங்கி இறைவனிடம் விடை பெற்றுக் கீழ் வரும் பாடலைச் சொல்லி இறைவனை உள்ளத்தில் அமரச்செய்தல் வேண்டும்

## 25. உள்ளத்தில் அமரச்செய்தல் (சயனம்)

" கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ அங்கையினி லனலேந்தி
இரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே
(அப்பர்)

சீரார் பவளங்கால் முத்தம் கயிறாக
ஏராரும் பொற்பலகை ஏறி இனிதமர்ந்து
நாராயணன் அறியா நாண்மலர்த்தாள் நாயடியேற்கு
ஊராகத் தந்தருளும் உத்தரகோச மங்கை
ஆரா அமுதின் அருள் தாளிணை பாடிப்
போரார் வேற்கண் மடவீர் பொன்னூசல் ஆடாமோ.

உ

அன்பே சிவம்

திருக்கோயிலில் நித்திய வழிபாட்டுக்குரியவை.

# திருப்பள்ளி எழுச்சி வழிபாடு.

திருப்பள்ளியறையில் கீழ்வரும் பாடலைச் சொல்லி வணங்கித் திருக்கதவம் திறக்க.

(அ) பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்ம் மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே.

(ஆ) அரக்க னைவிர லாலடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கதந் திறப் பிம்மினே.

திருச்சிற்றம்பலம் (அப்பர்)

திருக்கதவம் திறந்த பிறகு பின்வரும் திருப்பள்ளி யெழுச்சிப் பாடல்களைச் சொல்லித் துதித்து கற்பூரம் காட்டி இறைவனைப் பல்லக்கில் ஏற்றித் திருக்கோயிலின் உட்பிர காரத்தில் வலமாகச் சுற்றி வந்து கருவறையில் எழுந்தருளச் செய்து கற்பூரம் காட்டி வழிபடவும்.

இதன்பிறகே கோயிலுக்குள் எந்தவிதமான வழிபாடும் தொடங்குதல் வேண்டும்.

உ

அன்பே சிவம்

# திருப்பள்ளியெழுச்சி

(அதிகாலையில் திருப்பள்ளியறைமுன் பாடவும்)

போற்றியென் வாழ்முத லாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற் கிணை துணை மலர்கொண்
டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
ஏற்றுயர்க் கொடியுடையா யெனை யுடையாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே 1

அதுபழச் சுவையென அமுதென அறிதற்
கரிதென எளிதென அமரரும் அறியார்
இதுஅவன் திருவுரு இவனவன் எனவே
எங்களை ஆண்டுகொண் டிங்கெழுந் தருளும்
மதுவளர் பொழில்திரு உத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னு
எதுஎமைப் பணிகொளு மாறது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி எழுந்தருளாயே. 7

(திருவாசகம்)

திருச்சிற்றம்பலம்

உ

# பிள்ளையார் திருமுன்

(அர்ச்சனை)

திருச்சிற்றம்பலம்

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்று கின்றேனே.

(திருமந்திரம்) 1

வானுலகும் மண்ணுலகும் வாழ மறைவாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமதம் ஐந்துகர மூன்றுவிழி நால்வாய்
ஆனைமுக னைப்பரவி அஞ்சலிசெய் கிற்பாம்

(திருத்தொண்டர் புராண வரலாறு) 2

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் — உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர் தம்கை. 3

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான் — விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாந் தன்மையினாற்
கண்ணிற் பணிமின் கனிந்து 4

உ

# சிறப்பு வழிபாடு காலங்களில் பிள்ளையார் திருமுன் அர்ச்சனை

திருச்சிற்றம்பலம்

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பல இசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்கு சிந்தூரமும்
அஞ்சு கரமு மங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணு மும்மதச் சுவடும்
இரண்டு செவியு மிலங்கு பொன்முடியுந்
திரண்டமுப் புரிநூல் திகழொளி மார்பும்
சொற்பதங் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புத நின்ற கற்பகக் களிறே
முப்பழ நுகரு மூஷிக வாகன
இப்பொழு தென்னை யாட்கொள வேண்டித்
தாயா யெனக்குத் தானெழுந் தருளி
மாயாப் பிறவி மயக்க மறுத்துத்
திருந்திய முதலைந் தெழுத்துந் தெளிவாய்
பொருந்தவே வந்தென் உளந்தனிற் புகுந்து
குருவடி வாகிக் குவலயந் தன்னில்

திருவடி வைத்துத் திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தாற் கொடுவினை களைந்தே
உவட்டா வுபதேசம் புகட்டியென் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி
ஐம்புலன் றன்னை யடக்கு முபாயம்
இன்புறு கருணை யினிதெனக் கருளிக்
கருவிகளொடுங்குங் கருத்தினை யறிவித்து
இருவினை தன்னை யறுத்தருள் கடிந்து
தலமொரு நான்குந் தந்தெனக் கருளி
மலமொரு மூன்றின் மயக்க மறுத்தே
ஒன்பது வாயி லொருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை யடைப்பதுங் காட்டி
ஆறா தாரத் தங்குச நிலையும்
பேரா நிறுத்திப் பேச்சுரை யறுத்தே
இடையிங் கலையி னெழுத்தறி வித்துக்
கடையிற் சுழுமுனை கபாலமுங் காட்டி
மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பினாவி லுணர்த்திக்
குண்டலிய தனிற் கூடிய அசபையில்
விண்டெழு மந்திரம் வெளிப்பட வுரைத்து
மூலாதாரத்தின் மூண்டெழு கனலைக்
காலா லெழுப்புங் கருத்தறி வித்தே
அமுத நிலையு மாதித்த னியக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி
இடைச்சக் கரத்தி னீரெட்டு நிலையும்

உடற்சக் கரத்தினுறுப் பையுங் காட்டி
சண்முக தூலமும் சதுர்முக சூக்குமமும்
எண்முக மாக வினிது எனக் கருளிப்
புரியட்ட காயம் புலப்பட வெனக்குத்
தெரியெட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்
கருத்தினிற் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி யினிதெனக் கருளி
என்னை யறிவித் தெனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்து
வாக்கு மனமும் இல்லா மனோலயத்
தேக்கியே யென்றன் சிந்தை தெளிவித்
திருள்வெளி யிரண்டுக்கு ஒன்றிட மென்ன
அருள்தரு மானந்தத் தழுத்தியென் செவியில்
எல்லை யில்லா வானந் தம்அளித்து
அல்லல் களைந்தே யருள்வழி காட்டி
சத்தத் தினுள்ளே சதாசிவங் காட்டி
சித்தத் தினுள்ளே சிவலிங்கங் காட்டி
அணுவிற் கணுவா யப்பாலுக் கப்பாலாய்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமு நீறும் விளங்க நிறுத்திக்
கூடிமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தினரும் பொருள் தன்னை
நெஞ்சக் கரத்தி னிலையறி வித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை யாண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே. (ஔவையார்)

திருச்சிற்றம்பலம்.

# சிவபெருமான் முன் பூப்பலியிடுதல்

## [ அர்ச்சனை ]

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி யுள்ளே யொளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி யங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்க நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 1

பிச்சாடல் பேயோடு உகந்தாய் போற்றி
பிறவி யறுக்கும் பிரானே போற்றி
வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
பொய்ச்சார் புரமூன்று மெய்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாக மசைத்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 2

மருவார் புரமூன்று மெய்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
உருவாகி யென்னைப் படைத்தாய் போற்றி
உள்ளாவி வாங்கி யொளித்தாய் போற்றி

திருவாகி நின்ற திறமே போற்றி
தேசம் பரவப் படுவாய் போற்றி
கருவாகி யோடு முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 3

வானத்தார் போற்று மருந்தே போற்றி
வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கும் உடலே போற்றி
ஓங்கி யழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்கும் தேவனாய் நின்றாய் போற்றி
கானத்தீ யாட லுகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

ஊராகி நின்ற வுலகே போற்றி
ஓங்கி யழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி யெங்கும் பரந்தாய் போற்றி
பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவி யான நிழலே போற்றி
நேர்வார் ஒருவரையு மில்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவரறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறு நின்றாய் போற்றி
பற்றி யுலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

பண்ணி னிசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவ மறுப்பாய் போற்றி
எண்ணு மெழுத்துஞ்சொல் லானாய் போற்றி
என் சிந்தை நீங்கா விறைவா போற்றி
விண்ணு நிலனுந் தீயானாய் போற்றி
மேலவர்க்கு மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 7

இமையாது உயிராது இருந்தாய் போற்றி
என் சிந்தை நீங்கா விறைவா போற்றி
உமைபாக மாகத் தணைத்தாய் போற்றி
ஊழி யேழான வொருவா போற்றி
அமையா வருநஞ்ச மார்ந்தாய் போற்றி
ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
கமையாகி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 8

மூவாய் பிறவாய் இறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர் கொழுந்தேவே போற்றி
சென்றேறி யெங்கும் பரந்தாய் போற்றி
ஆவா வடியேனுக் கெல்லாம் போற்றி
அல்லல் நலிய அலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 9

நெடிய விசும்பொடு கண்ணே போற்றி
நீள அகலம் உடையாய் போற்றி
அடியும் முடியும் இகலிப் போற்றி
அங்கொன்று அறியாமை நின்றாய் போற்றி
கொடியவன் கூற்றம் உதைத்தாய் போற்றி
கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய வுருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 10

உண்ணாது உறங்காது இருந்தாய் போற்றி
ஓதாத வேதம் உணர்ந்தாய் போற்றி
என்னா விலங்கைக் கோன்றன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்துகந்த வீசா போற்றி
பண்ணாரிசையின் சொற்கேட்டாய் போற்றி
பண்டேயென் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணா யுலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 12

திருச்சிற்றம்பலம்

என்ற பாடல்களைச் சொல்லி மலர் தூவி வழிபடுக.

## தூபம் காட்டும்போது

சலம்பூ வொடுதூப மறந் தறியேன்
தமிழோ டிசைபா டல்மறந் தறியேன்
நலந்தீங் கிலும் உன்னை மறந்தறியேன்
உன்னா மம்என்னா வில்மறந் தறியேன்

உலந்தார் தலையிற் பலிகொண் டுழல்வாய்
உடலுள் ளுறுசூ லைதவிர்த் தருளாய்
அலந்தே னடியே னதிகைக் கெடில
வீரட்டானத் துறையம்மானே.

திருச்சிற்றம்பலம்

உணவூட்டல் (நைவேத்தியம் காட்டல்)

ஆலந்தா னுகந்து அமுது செய்தானை
ஆதியை அமரர் தொழுதேத்துஞ்
சீலந்தான் பெரிதும் உடையானைச்
சிந்திப்பாரவர் சிந்தை யுள்ளானை

ஏலவார் குழலாளுமை நங்கை
யென்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
காலகாலனைக் கம்பனெம் மானைக்
காணக்கண் அடியேன் பெற்றவாறே

திருச்சிற்றம்பலம்

## அடுக்கு விளக்கு காட்டும்பொழுது

சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் நீற்றாய்
பங்கயத் தயனும்மா லறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர் குருந்தமே வியசீர்
ஆதியே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றருளாயே (திருவாசகம்)
திருச்சிற்றம்பலம்

## ஐந்து விளக்குகள் காட்டும்பொழுது

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே
(திருமந்திரம்)

## மூன்று விளக்குகள் காட்டும்பொழுது

இல்லக விளக்கது இருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதியுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே (அப்பர்)
திருச்சிற்றம்பலம்

## தனி விளக்கு காட்டும்பொழுது

உடம்பெனு மனையகத்து வுள்ளமே தகழியாக
மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே (அப்பர்)
திருச்சிற்றம்பலம்

## கூடவிளக்கு காட்டும்போது

ஒளிவளர் விளக்கே உலப்பிலா வொன்றே
உணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக்குன்றே
சித்தத்துள் தித்திக்குந் தேனே
அளிவள ருள்ளத் தானந்தக் கனியே
அம்பலம் ஆடரங்காக
வெளிவளர் தெய்வக் கூத்துஉகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.
(திருவிசைப்பா)

## கற்பூரம் காட்டல்

கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி
அற்புதக் கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம்பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி
(பெரிய புராணம்)

சிவாலயத்தில் நடக்கும் வழிபாட்டின் முடிவில் பஞ்ச புராணம்என்று வழங்கும் தேவாரம் திருவாசகம் திருவிசைப்பா திருப்பல்லாண்டு பெரியபுராணம் என்னும் ஐந்து நூல்களி லிருந்தும் ஒவ்வொரு பாடலாவது சொல்ல வேண்டும்.

## தேவாரம்

நின்றுவார் பிறரன்றி நீயே யாறுய்
நினைப்பார்கள் மனதுக்கோர் வித்து மாறுய்
மன்னறுய் மன்னவர்க்கோ ரமுத மாறுய்
மறைநான்கு மாறுயா றங்க மாறுய்
பொன்றுறுய் மணியாறுய் போக மாறுய்
பூமிமேற் புகழ்தக்க பொருளே யுன்னை
என்றுறுய் யென்றுறு யென்னி னல்லால்
ஏழையே னென்சொல்லி யேத்துகேனே

(அப்பர்)

## திருவாசகம்

அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே,

## திருவிசைப்பா

கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியை
கரையிலாக் கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றவெஞ் சிவனைத்
திருவீழி மிழலை வீற்றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண் டுள்ளம்
குளிரஎன் கண்குளிர்ந் தனவே

## திருப்பல்லாண்டு

மன்னுக தில்லை வளர்கநம் பக்தர்கள் வஞ்சகர் போயகலப்
பொன்னின்செய் மண்டபத்துள்ளே புகுந்து
புவனியெல்லாம் விளங்க
அன்னநடை மடவாள் உமைகோன் அடியோமுக் கருள்
புரிந்து
பின்னைப் பிறவியறுக்க நெறிதந்த பித்தற்குப்
பல்லாண்டு கூறுதுமே

## பெரியபுராணம்

என்று மின்பம் பெருகு மியல்பினால்
ஒன்று காதலித்துள்ள மூமோங்கிட
மன்றுளா ரடியாரவர் வான்புகழ்
நின்றதெங்கும் நிலவி உலகெலாம்
திருச்சிற்றம்பலம்

## வழிபாட்டில் உள்ள குற்றங் குறைகளை மன்னித்தருள வேண்டுதல்.

பொன்னும் மெய்ப்பொருளுந் தருவானைப்
போகமும் திருவும் புணர்ப்பானைப்
பின்னை என்பிழை யைப்பொறுப்பானைப்
பிழையெ லாந்தவி ரப்பணிப்பானை
இன்ன தன்மைய னென்றறி வொன்று
எம்மா னையெளி வந்தபிரானை
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி
ஆரூரானை மறக்கலு மாமே (சுந்தரர்)

திருச்சிற்றம்பலம்

## முடிவில் உலகம் நலம்பெற வாழ்த்துக் கூறுதல்.

வையம்நீடுக மாமழை மன்னுக
மெய்விரும்பிய அன்பர் விளங்குக
சைவநன் னெறிதான் தழைத்தோங்குக
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே.

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே

திருச்சிற்றம்பலம்

திருமுழுக்காட்டும் காலங்களில் உடையவர் வழிபாட்டில் சொல்லிய பாடல்களைச் சொல்வதோடு சிவபுராணம் கூறுதலும் வேண்டும்.

## சிவபுராணம்

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேக னிறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல் வெல்க

ஈசன் அடிபோற்றி எந்தை அடிபோற்றி
தேசன் அடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலனடி போற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னனடி போற்றி
சீரார் பெருந்துறை நம் தேவனடி போற்றி
ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே யவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை
முந்தைவினை முழுதும் ஓயவுரைப் பனியான்

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லையிலா தானே நின் பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யாயின வெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே

ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே

கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற்குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்குமனத்தால் விமலா வுனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்

தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆராவமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதா ருள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீரா யுருக்கியென் னாருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே

அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே யத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்

மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே யுடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் ஐயா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே

அல்லற் பிறவி யறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்

## அம்மை திருமுன்

(அர்ச்சனைக்கு)

கரும்புமுரல் கடிமலர்ப் பூங்குழல் போற்றி
உத்தரியத் தொடித்தோள் போற்றி
கரும்புருவச் சிலைபோற்றி கவுணியர்க்குப்
பால்சுரந்த கலசம் போற்றி
இரும்புமனங் குழைத்தென்னை யெடுத்தாண்ட
அங்கயற்கண் எம்பி ராட்டி
அரும்புமிள நகைபோற்றி யாரணநூ
புரஞ்சிலம்பும் அடிகள் போற்றி

(திருவிளையாடற் புராணம்)

திருச்சிற்றம்பலம்

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய இருள்நீங்க
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க
அரந்தைகெடப் புகலியர்கோ னமுதுசெய்த திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவஞான சுந்தரிபூங் கழல் போற்றி.

திருச்சிற்றம்பலம்

தொடுக்குங் கடவுட் பழம்பாடல்
  தொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகு நறுஞ்
  சுவையே யகந்தைக் கிழங்கையகழ்ந்
தெடுக்குந் தொழும்ப ருளக்கோயிற்
  கேற்றும் விளக்கே வளர் சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
  இளமென் பிடியே எறிதரங்கம்
உடுக்கும் புவனம் கடந்துநின்ற
  ஒருவன் திருவுள்ளத்தில் அழ
கொழுக எழுதிப் பார்த்திருக்கும்
  உயிரோவியமே மதுகரம்வாய்
மடுக்கும் குழற்கா டேந்தும் இள
  வஞ்சிக்கொடியே வருகவே
மலயத்துவசன் பெற்ற பெரு
  வாழ்வே வருக வருகவே

திருச்சிற்றம்பலம்

(மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்)

மேற்கண்ட பாடல்களைச் சொல்லி மலர் தூவி அர்ச்சித்தும் பிறகு சிவவழிபாட்டிற் கூறியபடி மற்ற பாடல்களைச் சொல்லி வழிபாட்டை முடிக்கவும்.

அம்பலவாணர், ஆலமர் செல்வன் (தக்ஷிணாமூர்த்தி) முதலிய மூர்த்திகள் சிவமூர்த்தங்களே ஆதலால், சிவபிரானுக்குச் சொல்லியபடியே வழிபாடுகள் செய்யவும்,

## முருகன் திருமுன்

(அர்ச்சனை)

அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ போற்றி
ஆல்கெழு கடவுள் புதல்வ போற்றி
மால்வரை மலைமகள் மகனே போற்றி
மாற்றோர் கூற்றே போற்றி

வெற்றி வேல்போர்க் கொற்றவை சிறுவ போற்றி
இழைஅணி சிறப்பிற் பழையோள் குழவி போற்றி
வானோர் வணங்குவில் தானைத் தலைவ போற்றி
மாலை மார்பபோற்றி நூல்அறி புலவ போற்றி
செருவில் ஒருவ போற்றி பொருவிறல் மள்ள போற்றி
அந்தணர் வெறுக்கை போற்றி அறிந்தோர்
சொல்மலை போற்றி

மங்கையர் கணவ போற்றி மைந்தர் ஏறே போற்றி
வேல்கெழு தடக்கைச் சால்பெரும் செல்வ போற்றி
குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ போற்றி
பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே போற்றி

அரும் பெறல் மரபிற் பெரும் பெயர் முருகா போற்றி
நசையுநர்க்கு ஆர்க்கும் இசை பேராள போற்றி
அலந்தோர்க்கு அளிக்கும் பொலம்பூண் சேஎய் போற்றி

மண்டு அமர் கடந்தநின் வென்று ஆடு அகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேஎள் போற்றி
பெரியோர் ஏத்தும் பெரும் பெயர் இயவுள் போற்றி

சூர்மருங்கு அறுத்த மொய்ப்பின் மதவலி போற்றி
போர்மிகு பொருந போற்றி குரிசில் போற்றி
எனப்பல யான் அறி அளவையின் ஏத்தி ஆனாது

நின் அளந்து அறிதல் மன் உயிர்க்கு அருமையின்
நின் அடி உள்ளி வந்தனன் நின்னொடு புரையுநர்
இல்லாப் புலமையோய் போற்றி
கந்தவேள் அடி போற்றி போற்றி.

(திருமுருகாற்றுப்படை 255-280)

திருச்சிற்றம்பலம்

சிவ வழிபாட்டிற்கு சொல்லிய பாடல்களையே கூறி உண ஊட்டி, தூபம், கற்பூரம் முதலியன காட்டிய பிறகு முருகனுக்கு மிக விருப்பமான ஐந்து நூல்களில் ஒவ்வொரு பாடலைச் சொல்லித் துதிக்கவும்.

## திருப்புகழ்

பக்தியால் யானுனைப் பலகாலும்
பற்றியே மாதிருப் புகழ்பாடி
முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்
முத்தியே சேர்வதற் கருள்வாயே
உத்தம தானசற் குணர்நேயா
ஒப்பிலா மாமணிக் கிரிவாசா
வித்தக ஞானசத் திநிபாதா
வெற்றிவே லாயுதப் பெருமாளே

## கந்தர் அலங்காரம்

மொய்தார் அணிகுழல் வள்ளியை
வேட்டவன் முத்தமிழால்
வைதா ரையுமங்கு வாழவைப்
போன்வெய்ய வாரணம்போற்
கைதா னிருப துடையான்
றலைபத்துங் கத்தரிக்க
எய்தான் மருக னுமையாள்
பயந்த இலஞ்சியமே

## கந்தர் அனுபூதி

வானோ புனல்பார் கனல்மா ருதமோ
ஞானோ தயமோ நவில்நான் மறையோ
யானோ மனமோ வெனையாண் டவிடந்
தானோ பொருளா வதுசண் முகனே.

## பிள்ளைத்தமிழ்

பேராதரிக்கும் அடியவர்தம் பிறப்பை
ஒழித்துப் பெரு வாழ்வும்
பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமானென்னும் பேராளா
சேரா நிருதர் குலகலகா சேவற் கொடியாய்
திருச்செந்தூர்த்
தேவா, தேவர் சிறைமீட்ட செல்வா, வென்றுன்
திருமுகத்தைப்
பாரா மகிழ்ந்து முலைத்தாயர் பரவிப் புகழ்ந்து
விருப் புடனப்
பா ;, வா !! வா !! என்றுனைப் போற்றிப் பரிந்து
மகிழ்ந்து வரவழைத்தால்
வாரா திருக்க வழக்குண்டோ வடிவேல் முருகா வருகவே
வளருங்களபக் குரும்பைமுலை வள்ளிக் கணவா வருகவே !

(திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ்)

## கந்த புராணம்

அருவமும் உருவமாகி அநாதியாய்ப் பலவாய் யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணை கூர் முகங்களாறுங் கரங்கள் பன்னிரண்டுங்
கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய.

# வாழ்த்து

ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞைவாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளிவாழ்க வாழ்கசீர் அடியாரெல்லாம்

திருச்சிற்றம்பலம்

மேற்கண்ட பாடல்களைக் கூறி கற்பூரம் காட்டி வழிபடவும்.

குமர குருபரர் இயற்றிய கந்தர் கலிவெண்பாவில் முருகன் தோற்றம் முதல் முடிவு வரையும் வரும் பின்வரும் பாடல்களைச் சொல்லித் தீ ஓம்புக.

## முருகவேள் விழாவில் தீ வளர்க்க

சிறப்பு நாட்களில் வேள்வித் தீ வளர்க்க.

திருச்சிற்றம்பலம்

பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப் பூங்கோதையிடம்
பாங்குறையு முக்கட் பரஞ்சோதி—ஆங்கொருநாள்
வெந்தகுவர்க் காற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி
ஐந்து முகத்தோ டதோமுகமும்—தந்து

திருமுகங்கள் ஆருகிச் செந்தழற்க ணாறும்
ஒருமுகமாய்த் தீப்பொறியா றுய்ப்ப...விரிபுவனம்
எங்கும் பரக்க விமையோர்கள் டஞ்சுதலும்

பொங்குதழற் பிழம்பைப் பொற்கரத்தால்—அங்கண்
எடுத்தமைத்து வாயுவைக் கொண் டேகுதியென் றெம்மான்
கொடுத்தளிப்ப மெல்லக் கொடுபோய்—அடுத்ததொரு
பூதத் தலைவகொடு போதியெனத் தீக்கடவுள்
சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்பப்—போதொருசற்

றன்னவளுங் கொண்டமைதற் காற்ருள் சரவணத்திற்
சென்னியிற் கொண்டுய்ப்பத் திருவுருவாய்—முன்னர்
அறுமீன் முலையுண் டழுதுவிளையாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன்...குறுமுறுவற்
கன்னியொடுஞ் சென்றவட்குக் காதலருக் காட்டுதலும்

அன்னவள் கண்டவ்வுருவ மாறினையும்—தன்னிரண்டு
கையா லெடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறு மொன்ருக மேவுவித்துச்—செய்ய
முகத்தி லணைத்து உச்சி மோந்து முலைப்பால்
அகத்துள் மகிழ்பூத் தளித்துச்—சகத்தளந்த

வெள்ளை விடைமேல் விமலன் கரத்திலளித்து
உள்ள முவப்ப வுயர்ந்தோனே—கிள்ளைமொழி
மங்கை சிலம்பின் மணியொன் பதிற்றொன்றும்
துங்க மடவார் துயர் தீர்ந்து—தங்கள்
விருப்பா லளித்தநவ வீரருக்குண் முன்றோன்

மருப்பாயுந் தார்வீர வாகு—நெருப்பிலுதித்து
அங்கட் புவன மனைத்து மழித்துலவும்
செங்கட் கடாவதனைச் சென்று கொணர்ந்து—எங்கோன்
விடுக்குதியென் றுய்ப்பவதன் மீதிவர்ந் தெண்டிக்கும்
நடத்தி விளையாடு நாதா—படைப்போன்

அகந்தை யுரைப்பமறை யாதி யெழுத்தொன்
றுகந்த பிரணவத்தி னுண்மை—புகன்றிலையால்
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ஙன் என்றுமுனம்
குட்டிச் சிறையிருத்துங் கோமானே—மட்டவிழும்
பொன்னங் கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப

முன்னம் பிரம மொழிந்தோனே—கொல்நெடுவேல்
தாரகனும் மாயத் தடங்கிரியுந் தூளாக
வீர வடிவேல் விடுத்தோனே—சீரலைவாய்த்
தெள்ளு திரை கொழிக்குஞ் செந்தூரிற் போய்க்கருணை

வெள்ள மௌனத்தவிசின் வீற்றிருந்து—வெள்ளைக்
கயேந்திரனுக் கஞ்ச லளித்துக் கடல்சூழ்
மயேந்திரத்திற் புக்கிமையோர் வாழச்—சயேந்திரனும்
சூரனைச் சோதித்துவரு கென்றுநடந் தோள்விசய
வீரனைத்தூ தாக விடுத்தோனே—காரவுணன்
வானவரை விட்டு வணங்காமை யாற்கொடிய

தானவர்க ணூற்படையுஞ் சங்கரித்துப்—பானு
பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனைவென்று வாகை முடித்தோய்—சகமுடுத்த
வாரி தனிற்புதிய மாவாய்க் கிடந்தநெடுஞ்
சூருடலங் கீண்ட சுடர்வேலோய்—போரவுணன்
அங்கமிருகூறு யடல்மயிலுஞ் சேவலுமாய்த்
துங்கமுட னார்த்தெழுந்து தோன்றுதலும்—அங்கவற்றுள்
சீறுமரா வைப்பொருத சித்ரமயில் வாகனமா
ஏறி நடாத்து மிளையோனே—மாறிவரு
சேவற் பகையைத் திறல்சேர் பதாகையென

மேவத் தனித்துயர்ந்த மேலோனே—மூவர்
குறைமுடித்து விண்ணங் குடியேற்றித் தேவர்
சிறை விடுத்தாட் கொண்டளித்த தேவே—மறைமுடிவாஞ்
சைவக் கொழுந்தே தவக்கடலே வானுதவும்

தெய்வ களிற்றைமணஞ் செய்தோனே—பொய்விரவு
காம முனிந்த கலைமுனிவன் கண்ணருளால்
வாமமட மானின் வயிற்றுதித்துப்—பூமருவு
கானக் குறவர் களிகூறப் பூங்குயில் போல்
ஏனற் புனங்காத் தினிதிருந்து—மேன்மைபெறத்
தெள்ளித் தினைமாவுந் தேனும் பரிந்தளித்த

வள்ளிக் கொடியைமணந்தோனே—உள்ளமுவந்
தாறு திருப்பதிகண் டாறெழுந்து மன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே—நாறுமலர்க்
கந்திப் பொதும்பரெழு காரலைக்குஞ் சீரலைவாய்ச்
செந்திப் பதிபுரக்குஞ் செவ்வேளே—சந்ததமும்

பல்கோடி சன்மப் பகையு மவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும்—பல்கோடி
பாதகமுஞ் செய்வினையும் பாம்பும் பசாசுமடற்
பூதமுந்தீ நீரும் பொருபடையும்—தீதகலா
வெவ்விடமுந் துட்ட மிருகமுத லாமெவையும்

எவ்விடம் வந்தெம்மை யெதிர்ந்தாலும்—அவ்விடத்திற்
பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்டோளும்
அச்ச மகற்று மயில்வேலும்—கச்சைத்
திருவரையுஞ் சீரடியுஞ் செங்கையும் ஈராறு
அருள்விழி யுமாமுகங்க ளாறும்—விரிகிரணம்

சிந்தப் புனைந்த திருமுடிக ளோராறும்
எந்தத் திசையும் மெதிர்தோன்ற—வந்திடுக்கண்
எல்லாம் பொடிபடுத்தி யெவ்வரமுந் தந்துபுகுந்
துல்லாச மாக வுளத்திருந்து—பல்விதமாம்
ஆசுமுத னாற்கவியு மட்டாவ தானமுஞ்சீர்ப்

பேசுமியல் பல்காப்பிய தொகையும்—ஓசை
எழுந்துமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப் புலமை பாலித்—தொழுக்கமுடன்
இம்மைப் பிறப்பி லிருவா தனையகற்றி

மும்மைப் பெருமலங்கண் மோசித்துத்—தம்மைவிடுத்
தாயும் பழைய வடியா ருடன் கூட்டித்
தோயும் பரபோகந் துய்ப்பித்துச்—சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி யாட்கொண்டடி
யேற்கு முன்னின் றருள்.

திருச்சிற்றம்பலம்

மேற்கண்டவாறு தீ வளர்த்து வழிபாடு செய்த பிறகு முருகவேளுக்குச் சிறப்புத் திருமுழுக்காட்டி வழிபாடு செய்க.

திருச்சிற்றம்பலம்

# நால்வர் திருமுன்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழி திருநாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாதவூரர் திருத்தாள் போற்றி

அறுபத்து மூவர் பெருமக்களும் மணிவாசகரும் சித்தமலம் அறுவித்து சிவமாம்தன்மை பெற்றவர்களாகையால் சிவ பூசைக்குக் கூறுகின்ற பாடல்களைச் சொல்லியே வழிபாடு செய்க.

## சனிஸ்வரர் நவக்கோள்கள் திருமுன்

(கோளறு பதிகம்)

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிக நல்ல வீணைதடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந் தென்
உளமே புகுந்தவதனால்

ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனி பாம்பிரண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே. 1

என்பொடு கொம்பொடாமை யிவை மார்பிலங்க
எருது ஏறி யேழையுடனே
பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தென்
உளமே புகுந்தவதனால்
ஒன்பதொடொன்றொடேழு பதினெட்டொடாறும்
உடனாய நாள் களவைதாம்
அன்பொடு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே. 2

உருவளர் பவளமேனி யொளிநீ றணிந்து
உமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றை திங்கள் முடிமேலணிந்தென்
உளமே புகுந்தவதனால்
திருமகள் கலையதூர்தி செயமாது பூமி
திசை தெய்வ மானபலவும்
அருநெறி நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே. 3

மதிநுதல் மங்கையோடு வடபாலிருந்து
    மறையோது மெங்கள் பரமன்
நதியோடு கொன்றைமாலை முடிமேலணிந்தெ
    னுளமே புகுந்தவதனால்
கொதியுறுகாலனங்கி நமனோடு தூதர்
    கொடுநோய் களானபலவும்
அதிகுண நல்ல நல்ல அவை நல்ல நல்ல
    அடியாரவர்க்கு மிகவே 4

நஞ்சணி கண்டனெந்தை மடவாள் தன்னோடும்
    விடையேறு நங்கள்பரமன்
துஞ்சிருள்வன்னி கொன்றை முடிமேலணிந்தெ
    னுளமே புகுந்தவதனால்
வெஞ்சின அவுணரோடு முருமிடியுமின்னு
    மிகையான பூதமவையும்
அஞ்சிடு நல்லநல்ல அவை நல்ல நல்ல
    அடியாரவர்க்கு மிகவே 5

வாள்வரிய தளதாடை வரிகோவணத்தர்
    மடவாள் தன்னோடுமுடனாய்
நாள்மலர்வன்னி கொன்றை நதிசூடிவந்தெ
    னுளமே புகுந்தவதனால்

கோளரியுழுவையோடு கொலையானைகேழல்
கொடுநாக மோடுடி

ஆளரி நல்லநல்ல அவை நல்லநல்ல 6
அடியாரவர்க்கு மிகவே

செப்பின முலைநன்மங்கை யொருபாகமாக
விடையேறு செல்வனடைவார்

ஒப்பிள மதியமப்பு முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்

வெப்பொடு குளிரும்வாத மிகையான பித்தும்
வினையனே வந்து நலியா

அப்படி நல்லநல்ல அவை நல்லநல்ல 7
அடியாரவர்க்கு மிகவே

வேள்பட விழிசெய்தன்று விடைமேலிருந்து
மடவாள் தன்னோடு முடனாய்

வாள்மதி வன்னிகொன்றை மலர்சூடிவந்தெ
னுளமே புகுந்த வதனால்

எழ்கடல் சூழிலங்கை யரையன் தன்னோடும்
இடரானவந்து நலியா

ஆழ்கடல் நல்லநல்ல அவை நல்லநல்ல 8
அடியாரவர்க்கு மிகவே

பலபல வேடமாகும் பரனாரிபாகன்
பசுவேறு மெங்கள் பரமன்
சலமகளோடெருக்கு முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்
மலர்மிசை யோனுமாலு மறையோடுதேவர்
வருகால மானபலவும்
அலைகடல் மேருநல்ல அவை நல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே 9
கொத்தலர் குழலியோடு விசையற்குநல்கு
குணமாய வேடவிகிர்தன்
மத்தமு மதியுநாக முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்
புத்தரொடமணைவாதி லழிவிக்குமண்ணல்
திருநீறு செம்மைதிடமே
அத்தகு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே 10
தேனமர் பொழில்கொளாலை விளைசெந்நெல்துன்னி
வளர்செம்பொ னெங்குநிகழ
நான்முகனாதியாய பிரமாபுரத்து
மறைஞான ஞானமுனிவன்
தானுறு கோளுநாளு மடியாரை வந்து
நலியாத வண்ண முரைசெய்
ஆனசொன் மாலையோதும் மடியார்கள் வானில்
அரசாள்வர் ஆணை நமதே 11

திருச்சிற்றம்பலம்

## சண்டேஸ்வரர் திருமுன்

பொன்னங் கடுக்கை முடிவேய்ந்த
புனிதற் கமைக்கும் பொருளன்றி
மின்னுங் கலனுடைகள் பிறவும்
வேறுதனக்கென் றமையாமே
மன்னுந் தலைவன் பூசனையின்
மல்கும் பயனை அடியார்கள்
துன்னும்படி பூசனை கொள்ளுந்
தூயோனடித் தாமரை தொழுவாம்

திருச்சிற்றம்பலம்

## பைரவர் திருமுன்

பரமனை மதித்திடாப் பங்கையாசனன்
ஒருதலை கிள்ளியே ஒழிந்த வானவர்
குருதியும் அகந்தையுங் கொண்டு தண்டமுன்
புரிதரு வடுகனைப் போற்றி செய்குவாம்.

திருச்சிற்றம்பலம்

# பெருவிழாக் காலங்களில் சிறப்பு வழிபாடு

## (பாலிகை இட மண் எடுத்தல்)

பெரும் விழாக் காலங்களிலும் குடமுழுக்குக் காலங்களிலும் பிள்ளையார் வழிபாட்டிற்குப் பிறகு புனிதமான இடத்தில் மண் கொணர்ந்து முளைப்பாலிகை போட்டு வளர்த்தல்

வில்வம், வன்னி மரங்களின் அடியிலிருந்து தூய மண் எடுத்து வருதல் (மிருது சங்கரணம்)

1. "பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி"

என்று தூய நிலத்தின் மீது நீரைத் தெளித்து மலர் தூவித் தீபம் முதலியன வழிபாடு செய்து கீழ்வரும் பாடலைச் சொல்லி இறைவன் மண்ணில் கலந்து நிற்கும் தன்மையை நினைந்து மலர்களால் அர்ச்சித்து மண்ணை எடுத்து வருக.

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே.

திருச்சிற்றம்பலம்.

## 2. முளைப் பாலிகை இடுதல்.

( அங்குரார்ப்பணம் )

( அங்குரம் = விதை; அர்ப்பணம் = இடுதல் )

கீழ்வரும் பாடலைச் சொல்லிக்கொண்டே கொணர்ந்த மண்ணை நீரிட்டுச் சுத்தம் செய்து ஒரு தட்டில் இட்டு சமப் படுத்திப் பிறகு கீழ்வரும் பாடலைச் சொல்லி முன்னரே தண்ணீரில் இட்டு முளை தோன்ற வைத்திருந்த நவதானி யங்களை இட்டு கவனமாகப் பாதுகாத்துப் பாலிகை வளரும் படிச் செய்தல் வேண்டும்.

கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டு முருவானும் பிறைகாட்டும் சடையானும்
பண்காட்டு மிசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டி லுறைவானும் விடைகாட்டுங் கொடியானே

(சம்பந்தர்)

திருச்சிற்றம்பலம்.

## 3. கொடியேற்று விழா.

வெண்மையான துணியில் இடப தேவரை எழுதி (நான்கு கால்களையும் மடக்கிப் படுத்த நிலையில் காளையின் வடிவம்) இடபதேவர் எழுந்தருளுவதாக எண்ணிக் கீழ்வரும் பாடல் களைச் சொல்லி மலர்களால் அர்ச்சித்துத் தூப தீபம் காட்டி வழிபாடு செய்து கொடி மரத்தின் மேல் தளத்தில் கட்டி அதனுடன் சேர்த்து வைத்துள்ள நீளமான துணியைக் கொடி மரத்தில் ஆறு சுற்றுகள் சுற்றி முடிவில் தர்ப்பை மாவிலை முதலியன வைத்துக் கட்டி வழிபாடு செய்யவும்.

## திருநந்தி தேவர் துதி.

சைவ சமய முதற்குரவராகிய திருநந்தித் தேவரைத் துதித்து வணங்கிய பிறகு விடைத் தேவரை வழிபடுக.

1. ஐயிரு புராண நூல் அமலற்கு ஓதியும்
செய்யபன் மறைகளுந் தெரிந்து மாயையான்
மெய்யறு சூள்புகல் வியாதனீட்டிய
கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம்

2. வந்திறை அடியில் தாழும் வானவர் மகுடகோடி
பத்தியின் மணிகள் சிந்தவேத்திரப் படையால் தாக்கி

அந்தியும் பகலுந் தொண்டர் அலகிடுங் குப்பை யாக்கும்
நந்தியெம் பெருமான் பாத நகைமலர் முடிமேல் வைப்பாம்.

3. வேதநாத முதன்மால் புரந்தரன் முதலாம் விண்ணவர் எண்ணிலார் மற்றும்
காதலால் மிடைந்த முதற் பெருந்தடையாம் கதிர்மணிக் கோபுரத்துள்ளான்
பூதவேதாளப் பெருங்கணநாதர் போற்றிடப் பொதுவில் நின்றுடும்
நாதனூர் ஆதிவேதனூர் கோயில் நாயகன் நந்தியெம் பெருமான்.

திருச்சிற்றம்பலம்.

## 4. கொடியேற்று விழாவில் விடைத்தேவர் துதி.

விடை எழுதிய கொடியை பின்வரும் பாடல்களால் மலர் தூவித் துதித்துத் திருக்கோவிலை வலம் வரச் செய்து கொடி மரத்தடியில் வைத்துக் கொடிக் கவி பாடி கொடியேற்றி விழாத் தொடங்குக.

(அ) சடையார்புனல் உடையானொரு சரிகோவணம் உடையான்
படையார் மழுவுடையான் பல பூதப்படை உடையான்
மடமான்விழி உமைமாதிடம் உடையானெனை உடையான்
விடையார்கொடி உடையானிடம் வீழிம்மிழலையே.

(சம்பந்தர்)

(ஆ) அருகரொடு புத்தரவர் அறியாஅரன் மலையான் மருகன்
வரும் இடபக்கொடி உடையான்இடம் மலரான்
கருகுழன் மடவார்கடி குறிஞ்சியது பாடி
முருகன்னது பெருமைபகர் முதுகுன்று அடைவோமே

திருச்சிற்றம்பலம்.

கொடிக்கவி

கொடியேற்றும் போது பாடவும்.

1 ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம் ஒன்று மேலிடில் ஒன்று
ஒளிக்கும், எனினும் இருள் அடராது உள்ளுயிர்க்கு உயிராய்
தெளிக்கும் அறிவு திகழத் துளதேனுந்திரிமலத்தே
குளிக்கும் உயிர் அருள் கூடும்படிக் கொடி கட்டினனே

2. பொருளாம் பொருளேது போதேது கண்ணேது
இருளாம் தெளியேது இரவேது — அருளாளா
நீ புரவா வைய மெலாம் நீ அறியக் கட்டினேன்
கோபுர வாசற் கொடி.

3. வாக்காலும் மிக்க மனத்தாலும் எக்காலும்
தாக்காது உணர்வரிய தன்மையனை — நோக்கில்
பிரித்தறிவு தம்மிற் பிரியாமை தானே
குறிக்கும் அருள் நல்கக் கொடி.

4. அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும்
நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும் நெஞ்சழுத்திப்
பேசா எழுத்துடனே பேசும் எழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி.

கொடிக்கவி சைவ சித்தாந்த சாத்திரம் பதினான்கில் ஒன்று. இதை இயற்றியவர் சைவ சித்தாந்த சாத்திரங்களுள் எட்டு நூல்களை இயற்றிய உமாபதி சிவம் என்னும் பெருமகனாவார். இவர் தில்லைக் கூத்தப் பிரானை வழிபாடு செய்யும் தில்லை மூவாயிரவர் மரபில் தோன்றியவர். ஒரு சமயம் இவர் பெருமை உணராத மற்றைத் தீட்சதர்கள் இவரை ஆசாரக்குறைவுடையவரென்றுகூறி அம்பலவாணனை வழிபாடு செய்வதற்கு மறுத்தனர். அடிகளார்

கொற்றவன் குடியில் தமது திருக்குடிலில் சிவயோகம் பாவனையில் தவ நிலையில் வீற்றிருந்தார்.

அந்த ஆண்டு ஆதிரை விழாவில் கொடியேற்ற எவ்வளவோ முயன்றும் கொடி ஏற்ற முடியாமற் போயிற்று. முடிவில் மன்னன் முதல் யாவரும் வருந்த இறைவன் வானொலியாக உமாபதிசிவம் வந்தாலன்றி கொடியேறாது என்று உணர்ந்த பிறகு அரசன் முதல் யாவரும் அடிகள் அடி பணிந்து வேண்ட உமாபதி சிவம் திருக்கோயிலுக்கு எழுந்தருளி மேற்கூறிய கொடிக் கவியைப்பாடிய மாத்திரத்தில் கொடி இறையருளால் தாமே கொடிமரத்தில் ஏறிற்று. அடிகள் பெருமையையும் அம்பலவாணன் அருளையும் யாவரும் போற்றிப்புகழ்ந்தனர். இவர் சைவ சமய சந்தான குரவர்கள் (குருமார்கள்) நால்வரில் ஒருவர்.

திருச்சிற்றம்பலம்

பெருவிழாக் காலங்களில் திருமுழுக்கிற்கு முன்னர் குடநீர் வழிபாடு செய்தல்.

## திருமுறை திருக்காப்பிடல்

மார்கழி, சஷ்டியும் சதயமும் கூடிய நாளில் திருமுறைகளை வழிபட்டு பின்வரும் சம்பந்தர் திருப்பாடல்களை சொல்லி மஞ்சள் கயிற்றினால் பன்னிரு திருமுறைகளையும் திருக்காப்பிட்டு (கட்டிவைத்து விட்டு) திருவெம்பாவை விழாத் தொடங்குதல் வேண்டும்.

இக்காலத்தில் திருவெம்பாவைப் பாடல்களையும் மந்திரங்களையும் தவிர, மற்ற பாடல்களோ திருமுறைப் பாடல்களையோ வழிபாட்டில் சொல்லக்கூடாது என்பது மரபு.

1. சதுரம் மறைதான் துதிசெய்து வணங்கும்
மதுரம் பொழில்சூழ் மறைக் காட்டுறை மைந்தா
இது நன்கு இறைவைத்தருள் செய்க எனக்குன்
கதவும் திருக்காப்புக் கொள்ளுங் கருத்தாலே

(இறை - விரைவில்)

2. காழி நகரான் கலைஞான சம்பந்தன்
வாழிம்மறைக்காடு அணைவய்ந்து அறிவித்த
ஏழின் இசைமாலை மிசைந்து இவைவல்லார்
வாழி உலகோர் தொழுவான் அடைவாமே (சம்பந்தர்)

திருச்சிற்றம்பலம்.

## திருமுறை திருக்காப்பு நீக்கல்.

திருக்காப்பிட்டு பத்தாவது நாள் திருஆதிரை விழாத் தொடங்குமுன் கீழ்வரும் அப்பர் பாடலைச் சொல்லி திருக்காப்பு நீக்கி வழக்கம்போல் வழிபாடு தொடங்குதல் வேண்டும்.

திருச்சிற்றம்பலம்

1. பண்ணினேர் மொழியாள் உமை பங்கரோ
மண்ணினார் வலஞ்செய்ம் மறைக்காடரோ
கண்ணினால் உமைக் காணக் கதவினைத்
திண்ணமாகத் திறந்தருள் திறந்து அருள் செய்ம்மினே

2. அரக்கனை விரலால் அடர்த்திட்ட நீர்
இரக்கம் ஒன்றிலீர் எம்பெருமானீரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கதவந் திறப்பிம்மினே (சம்பந்தர்)

திருச்சிற்றம்பலம்

## சிவ வழிபாடு.

சிவ வேள்வி நடத்துகின்றவர் ஆன்மார்த்த வழிபாடு முடித்துக்கொண்டு ஆசனத்தில் அமர்ந்து கொள்ளவேண்டும்.

## குடம் நிறுவுதல். (கலசதாபனம்)

வாழை இலையின்மீது அரிசியைப் பரப்பி நூல் சுற்றிய திருக்குடங்கள் இரண்டில் தூயநீர் நிரப்பி மாவிலை செருகி தேங்காய் வைத்து மலர்சூட்டி சிவ குடத்திற்கு வெள்ளை ஆடையும், சத்தி குடத்திற்கு சிவப்பு ஆடையும் சாத்தவும்.

2. குடத்திற்கு அருகில் இலையின்மீது மஞ்சள் பிள்ளையார் பிடித்து வைத்துக்கொண்டு பிள்ளையார் வழிபாடு செய்தல் வேண்டுதல்.

3. வழிபாட்டிற்கு இறைவன் துணை நின்று அருள வேண்டும்.

வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் தன்னைச்
சுடர்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடத் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேனானே. (அப்பர்)

# இறைவனை குடத்திற்கு எழுந்தருளச் செய்தல்.

(ஆவாகனம்)

சேர்த்த கைகளை குடலைபோல் விரித்துப் பிடித்து இரண்டு கைகளிலும் மலரை எடுத்துச் சிரசிற்குமேல் கைகளை உயர்த்தித் துவாத சாந்தப் பெருவெளியில் விளங்கும் இறைவனைக் கைகளிலுள்ள மலர்களின் மூலம் புருவமத்தி, உள்ளம் முதலிய தியான இடங்களுக்கு இறைவன் இறங்கி திருக்குடத்தில் எழுந்தருளுவதாகப் பாவித்து கீழ்வரும் பாடலைச் சொல்லி சிவகுடத்தில் மலர்களைச் சொரியவும்.

மாறி நின்றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத்(து) அமுதே
ஊறிநின் றென்னுள் எழுபரஞ் சோதி
உள்ளவா காண வந்தருளாய்
தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
இன்பமே என்னுடை அன்பே.

திருச்சிற்றம்பலம்

## திருக்குடத்தில் சக்தியை எழுந்தருளச் செய்தல்

மீண்டும் முன்னர்க் கூறிய வண்ணம் மலர்களைக் கையில் எடுத்துத் திருவருளாகிய பராசக்தி குடத்தில் எழுந்தருளுவ தாகக் கீழ்வரும் பாடலைச் சொல்லி மலர்களைச் சக்தி குடத்தின் மீது சொரியவும்.

தொடுக்குங் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே நறை பழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகு நறுஞ்
சுவையே யகந்தைக் கிழங்கை யகழ்ந்
தெடுக்குந் தொழும்ப ருளக் கோயிற்
கேற்றும் விளக்கே வளர் சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே எறி தரங்கம்
உடுக்கும் புவனங் கடந்து நின்ற
ஒருவன் திருவுள்ளத்தில் அழ
கொழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிரோவியமே மதுகரம் வாய்
மடுக்குங் குழற்கா டேந்தும் இள
வஞ்சிக் கொடியே வருகவே
மலயத் துவசன் பெற்ற பெரு
வாழ்வே வருக வருகவே

திருச்சிற்றம்பலம்

சிவம் சக்தி இருவருக்கும் அர்க்கியம், ஆசமனம் பாத்யம் கொடுக்கவும் (நீர் தெளித்து நீர் அருந்தச் செய்யவும்)

## அர்க்கியம் கொடுக்கும்போது பாடவும்

தோடொரு காதனுகி யொருகாதிலங்கு சுரிசங்கு
நின்று புரளக்
காடிடமாக நின்று கனலாடும் எந்தையிடமாய
காதனகர்தான்
வீடுடன் எய்துவார்கள் விதியென்று சென்று
வெறிநீர் தெளிப்பவிரலால்
நாடுடனாடு செம்மை யொலிவெள்ள மாரு
தனி பள்ளி போலுநமர்காள் (சம்பந்தர்)

வழிபாடு முடியும் வரை இறைவனும் இறைவியும் திருக் குடங்களில் எழுந்தருளி இருக்க வேண்டுதல்:

திருச்சிற்றம்பலம்

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
யியமான னாயெறியுங் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
யாகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுஞ் சுற்றமும் பெண்ணு மாணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையா யின்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிக ணின்ற வாறே.

திருச்சிற்றம்பலம்

" அண்ணலே எனை ஆண்டுகொண்டருளிய அமுதே
விண்ணிலே மறைந் தருள்புரிவேத நாயகனே
கண்ணினால் திருக்கயிலையில் இருந்த நின் கோலம்
நண்ணி நான் தொழ நயந்தருள் புரி " எனப்
பணிந்தார்

## பூப்பலியிடுதல் (அர்ச்சனை)

திருக்குடத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானையும், சிவசக்தியையும் நித்திய ஆலய வழிபாட்டில் சொல்லியபடி மலர் தூவி அர்ச்சித்து உணவூட்டி, தூபம், தீபம், கற்பூரம் காட்டி வழிபாடு செய்த பிறகு, பன்னிரு திருமுறைகளி லிருந்து ஒவ்வொரு பாடலாவது சொல்லித் துதிக்கவும்.

## வேள்வித் தீ வளர்த்தல்.

திருக்குடங்களுக்குக் கற்பூரங் காட்டிய சுடரைக்கொண்டு வேள்வி மேடையில் உள்ள சமித்துக்களைப் பற்றச்செய்து கீழ் வரும் பாடல்களைச் சொல்லி நெய் சொரிந்து தீ வளர்க்கவும். அதுபோது நாள் கோள் நலிவகற்ற முன்னர் கூறிய கோளறு பதிகம் ஓதி வழிபாட்டை முடித்துத் திருக்குடங்கள் இரண்டை யும் திருக்கோயிலை வலமாகக் கொணர்ந்து திருமுழுக் காட்டி உள்ள அந்தந்த மூர்த்திகளின் மீது திருக்குடங்

களிலுள்ள நீரைச் செலுத்து பின்னர் ஆடை அணிகளால் மூர்த்திகளை அழகு செய்து முன்னர் கூறியபடி மலர் தூவி அர்ச்சித்து வழிபாடு செய்து முடிக்கவும்.

## சிவ வேள்வி

தீ வளர்க்கக் கீழ்வரும் பாடல்களைச் சொல்லி வேள்வி நடத்தவும்.

ஆடகமதுரை அரசே போற்றி
கூடலிலங்கு குருமணி போற்றி
தென்தில்லை மன்றினு ளாடி போற்றி
இன்றெனக் காரமு தானாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி
மின்னாருருவ விகிர்தா போற்றி
கன்னா ருரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆவா என்றனக்கருளாய் போற்றி
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி
இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவா போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரசே போற்றி அமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேதி போற்றி விமலா போற்றி

ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
உடையாய் போற்றி உணர்வே போற்றி
கடையே னடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி
வானோர்க்கரிய மருந்தே போற்றி
ஏனோர்க் கெளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்றம முரணுறு நரகிடை
ஆழா மேயரு ளரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி
வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி
உரையுணர்(வு) இறந்த வொருவ போற்றி
விரிகடலுலகின் விளைவே போற்றி
அருமையி லெளிய அழகே போற்றி
கருமுகிலாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருள் மலையே போற்றி
என்னையு மொருவ னாக்கி யிருங்கழற்
சென்னியில் வைத்த சேவக போற்றி
தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி

அழிவிலா ஆனந்தவாரி போற்றி
அழிவதும் ஆவதும் கடந்தாய் போற்றி
முழுவதும் இறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி
வானகத் தமரர் தாயே போற்றி
பாரிடை ஐந்தாய் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவ ருள்ளத் தமுதே போற்றி
கனவிலும் தேவர்க் கரியாய் போற்றி
நனவிலும் நாயேற் கருளினை போற்றி
இடைமரு துறையு மெந்தாய் போற்றி
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரூர் அமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாறு போற்றி
அண்ணா மலையெம் அண்ணா போற்றி
கண்ணா ரமுதக் கடலே போற்றி
ஏகம் பத்துறை எந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி
குற்றா லத்தெங் கூத்தா போற்றி

கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலையெம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழிரு மூவருக்
கத்திக் கருளிய அரசே போற்றி
தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி
ஏனக் குருளைக் கருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளும் இறைவா போற்றி
தளர்ந்தே னடியேன் தமியேன் போற்றி
களங்கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சே லென்றிங் கருளாய் போற்றி
நஞ்சே யமுதே நயந்தாய் போற்றி,
அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி
பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி
உறவே போற்றி உயிரே போற்றி

சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பங்கா போற்றி
அலந்தேன் நாயே னடியேன் போற்றி
இலங்கு சுடரெம் மீசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னே போற்றி
கலையா ரரிகே சரியாய் போற்றி
திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமும் இறந்த சுடரே போற்றி
தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்துச் சுடரே போற்றி
ஆளா னவர்கட் கன்பா போற்றி
ஆரா அமுதே அருளே போற்றி
பேராயிரமுடைப் பெம்மான் போற்றி
தாளி அறுகின் தாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி
எந்தமை உய்யக் கொள்வாய் போற்றி

புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
அலைகடல் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்கன் றருளினை போற்றி
இரும்புலன் புலர இசைந்தனை போற்றி
படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுவீ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி
ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி
செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்த சொன்மாலை கொண்டருள் போற்றி
புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சய சய போற்றி.

(திருவாசகம் போற்றித் திருவகவல்)

திருச்சிற்றம்பலம்.

# கந்தர் சஷ்டி முதலிய சிறப்பு நாட்களில் முருகனுக்குச் சிறப்பு வழிபாடு செய்யும்போது செய்ய வேண்டுவன.

ஒரு உயர்ந்த மேடை மீது வாழை இலைகளைப் பரப்பி அதன் மீது பச்சரிசியை பரப்பி அறுகோணத்தை வரைந்து முருகனின் ஆறெழுத்தை அமைத்து சிவபூசைக்குச் சொல்லிய வண்ணம் நூல் சுற்றிய திருக்குடத்தில் புனித நீரை நிறைத்து மாவிலை செருகி தேங்காய் வைத்து ஆடை அணிகளால் அணி செய்து, பரப்பிய அரிசியின் அறுகோணத்தின் மத்தியில் வைக்கவும். மற்ற கோணங்களில் மற்ற ஐந்து முகங்களுக்காக ஐந்து சிறுகலசங்களுக்கு நூல் சுற்றித் திருக்குடத்திற்கு அமைத்தது போலவே செய்க.

ஐமுகச் சிவனும் இறைவனே அறுமுகச் சிவனும் முருக வேளாக அடியாருக்கு அருள் புரிய வருகின்றுளுகையால் சிவ வழிபாட்டிற்குச் செய்தபடியே முதலில் பிள்ளையார் வழிபாடு செய்த பிறகு முருக வேளைப் பரவெளியிலிருந்து திருக்குடத்திற்கு எழுந்தருளச் செய்யும்போது கீழ் வரும் பாடலைச் சொல்லி மலர்களைத் தூவவும்.

# முருகனை திருக்குடத்திற்கு எழுந்தருளச் செய்தல்.

(ஆவாஹனம்)

பேரா தரிக்கும் அடியவர் தம் பிறப்பை ஒழித்துப்
பெருவாழ்வும்
பேறுங் கொடுக்க வரும் பின்னைப் பெருமா
னென்னும் பேரானா
சேரா நிருதர் குலகலகா சேவற்கொடியாய் திருச்செந்தூர்த்
தேவா, தேவர் சிறைமீட்ட செல்வா யென்றுன்
திருமுகத்தைப்
பாரா மகிழ்ந்து முலைத்தாயர் பரவிப் புகழ்ந்து
விருப்புடனைப்
பாவா வாளன் றுனைப்போற்றிய பரித்து
மகிழ்ந்து வரவழைத்தால்
வாரா திருக்க வழக்குண்டோ வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை வள்ளிக் கணவா வருகவே

திருச்சிற்றம்பலம்.

## அவன் ஆறுமுகங்களுக்குக் கீழ்வரும் ஆறு பாடல்களால் துதிக்கவும்.

திருச்சிற்றம்பலம்

1 குன்றம் எறிந்தாய் குரைகடலில் சூர்தடிந்தாய்
புன்தலைய பூதப் பொருபடையாய் — என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாய் என் உள்ளத் துறை.

2 உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

3 உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின் செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தில் வாழ்வே.

4 அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சல் எனவேல் தோன்றும் — நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும்
முருகா என்றோதுவார் முன்.

5 முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகை முகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்

6 உன்னைக் கிடமியநீ காவாக திருத்தக்கார்
ஆர்க்குப் பணிந்தேன் அறுமுகவா, — பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காய் இனி.

இதன் பிறகு நித்திய ஆலய வழிபாட்டில் கூறியுள்ளபடி 'அறுவர்ப் பயந்த ஆறமர் செல்வ போற்றி' என்று தொடங்கும் தமிழ் மறையில் அர்ச்சிக்கவும்.

பிறகு அவ்வழிபாட்டிற் சொல்லிய படலங்களையே கூறி உணவூட்டி, தீபம், கற்பூரம் முதலியன காட்டி பிறகு முருகனுக்கு மிக விருப்பமான நூல்களாகிய திருமுருகாற்றுப்படை, அநுபூதி, கந்தர் அலங்காரம், முருகன் பிள்ளைத் தமிழ், கந்த புராணம் முதலியவற்றிலிருந்து ஒரு சில பாடல்களைச் சொல்லித் துதித்து வாழ்த்துப்பா கூறி வழிபாட்டை முடிக்கவும்.

திருச்சிற்றம்பலம்.

## வாழ்த்துப்பா.

வான்முகில் வழாது பெய்க ; மலிவளம் சுரக்க ; மன்னன்
கோன்முறை அரசு செய்க ; குறைவிலாது உயிர்கள் வாழ்க ;
நான்மறை அறங்கள் ஓங்குக ; நற்றவம் வேள்வி மல்க ;
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்.

திருச்சிற்றம்பலம்.